உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# போகமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்தியம் - எ00.

இது-மதுரை,

த - குப்புசாமிநாயுடு அவர்களால்

பரிசோதிக்கலுற்று,

சிட்டத்தூர்,

செங்கல்வராயமுதலியாரது

சென்னை :

சிற்றம்பலவிலாசம் பிரேஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1900.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# போகமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்தியம் - எ௱.

## பாயிரம்.

### கடவுள் வணக்கம்.

எண்சீர்க்கழிநெடில்விருத்தம்,

திருவளர்மூலாதார *முன்னோன்பாதம்
செப்புசுவாதிஷ்டான † வேதன்பாதம்
மருவுமணிப்பூரகஞ்சேர் ‡ மாயன்பாதம்
மன்னுமநாகதவுருத்ரவண்ணன்பாதம்
உருவளர்விசுத்திமகேச்சுரன் றன்பாதம்
உண்மையோடாக்கினையின்சதாசிவன் றன்பாதம்
குருவளருநாதாக்கள்பாதம்போற்றிக்
கூறுகிறேன்வயித்தியசூக்ஷந்தான்பாரே.

நூல்.

பாரப்பாபெருநூல்தான் மூன்றுகாண்டம்
பாடினேனதைக்குறுக்கி யேழுநூறு
சேரப்பாவாதமொடு ஞானமார்க்கஞ்
செப்பரியவயித்தியமு மஷ்டகர்மம்
ஆரப்பாவகைவிவர மாகச்சொன்னர்
அறியாதமாந்தரிதை யறிவீர்நன்றாய்
நேரப்பாகருக்குருவுந் திறந்துசொன்னேன்
நிகழ்த்தரியநூல்களுக்குத் திறவுகோலே. (க)

திறவுகோலாகவேதான் பாடிவைத்தேன் - செப்பரியசித்தரொன்னை மெச்சிக்கொண்டு, மறைவின்றிவெட்டவெளி யாகச்சொன்னார்-மகத்தானபிரமமுனி யென்றேயெண்ணி, உறவாடிநூல்வாங்கி யொளித்தார்சித்தர்-ஓகோகோமோசம்வந்த தென்றுசொல்லித், திறமாகஅவருடனே தர்க்கம்பேசிச்-செயலாகநூல்வெளியாய் வாங்கினேனே.()

* முன்னோன்-விநாயகன் † வேதன்-பிரமன் ‡ மாயன்-விஷ்ணு

வாங்கியேயுலகத்தோர் பிழைக்கமைந்தா - வளமானசரக்கினங் கட்டின்முங்கூட, தாங்கியேநீற்றினமாத் திரைசெந்தூரம்-தயங்காத லேகியங்கள் கிருதக்கற்பம், காங்கியேதிராவகமும் செயநீர்பற்பம்-களங்கோடுதைலங்கள் சூரணங்கள், பாங்கியேகியாழப்போக் குடனேயெல்லாம்-பண்பாகக்கருக்குருவு முறைக்கக்கேளே. (ந)

கருவென்னபூமியிட நாதம்விட்டால்-காணரிதுவாதமொடு வயித்தியஞ்செய்ய, கருவென்னபூமியிட நாதம்பூநீர்-கானல்மிகுமுவர்க் காட்டிற் குடிசைகட்டி, கருவென்னதைமாசி பங்குனியிலெல்லாங்-காத்திருந்தேயுவர்ப்பூவை வாரிவந்து, கருவென்னபாண்டத்தி விட்டுமைந்தா-கனமாகச்சுத்தசலந் தன்னைவாரோ. (ச)

வார்த்துமேகலக்கியந்தத் தெளிவைவாங்கி-வயமானபுத்தோட்டில் மகிழ்ந்துவாரு, வார்த்துமேரவிதனிலே காயவைத்து-மறுபடியுஞ்சுத்தசலந் தெளித்துப்பாரு, வார்த்தவுடன்புத்தோட்டி லிறக்கினுப்பாம்-மறுபடியுஞ்சுத்தசல முன்போல்வாரோ, வார்த்துமேதெளிவிறுத்து ரவியிற்காய-வைத்துநன்றாய்ப் பத்துமுறைவளமாய்ச்செய்யே.

செய்தபின்னரின்னமொரு சூட்சங்கேளு-சிறப்பாகமுன்போலச் சலத்தையிட்டுப், பெய்தவுடன்பாண்டத்திற் றமர்தான்போட்டுப்-பெட்புடனே * கதம்பைவைத்துக் கீழேசட்டி, நெய்யவேவைத்துநடுக் கதம்பைமூக்கு-நிற்கவேபத்திரமாய் வைத்துமூடு, துய்யவேகதம்பையிட மூக்கால்மிக்க-சுத்தசலமாசின்றி யிறங்கும்பாரோ. (ரு)

* கதம்பை-பரும்புல்லின்றாள் அல்லது வைக்கோற்றாள்வைக்கவும்.

இறங்கியதோர்சலமதனை ரவியிற்காய்த்து - எடுத்திடவேவாதத்துக் காதியுப்பாம், அறங்கியேயிதைவிட்டுப் பூநீர்வாரி-யப்பனேகளைத்ததனைக் காய்ச்சிக்காய்ச்சி, இறங்கியேகல்லுப்புச் சுண்ணம்பிட்டு-எண்ணமிட்டுச்சவர்க்கார மாச்சுதென்று, உறங்கியேபார்த்ததிலே யொன்றுங்காணு-தோகோகோ கெட்டலைவார்வாதிதானே. (எ)

அலையாதேமுப்பூவின் குணத்தைக்கேளும்-ஆதியாங்கல்லுப்புப் படிதான்ரண்டு, சிலையான அமுரிவிட்டுக் கரைத்துநன்றாய்த்-தெளிவிறுத்துரவிதனிலே வைக்கினுப்பாம், மலையாதேயிப்படியே முறைதான்பத்து-வாங்கியேபிரமாந்தங் கல்லுச்சுண்ணம், அலையாதேபடியொன்று பாண்டத்திட்டு-அதில்வாரு * ஏறலென்றசிப்பிநீரோ. (அ)

* ஏறல்-கிளிஞ்சல்.

சிப்பிநீர்வார்த்ததனைக் கரைத்துநன்றாய்த்-திறமாகரவியிலிட்டுப் படருமுப்பூ, ஒப்புறவாயுப்பதனைப் பின்னுங்கேளு- உத்தமனேபத்து முறை தப்பாதேசெய், செப்பியேமுப்பூவும் வளரும்பாரு-சித்தர்செய்யுமுறையிதுதான் செய்யொண்ணாது, அப்பியேமுப்பூவைக் கல்வத்திட்டு-ஆட்டுவாய்முன்சிப்பி நீரில்காணே. (௯)

காணவேஆட்டியதை வில்லைதட்டி - காம்பிரமாய்ரவியுலர்த்தியோட்டிலிட்டு, பூணவேசீலைசெய்து புடத்திற்போட்டு - புனிதமாயெடுத்துமுன்போற் கல்வத்திட்டு, தோணவேயாட்டிவில்லை தட்டிக்காய்த்துத்-துரிதமாயோட்டினிலிட் டோடுமூடி, காணவே * குக்குடத்தின் புடந்தான்போடு-கனமாகமுப்பூவுங் கட்டிப்போச்சே. (௰)

* குக்குடபுடம் - கோழியளவுபுடம்.

போச்சென்றமுப்பூவும் வாதமாச்சு-புகழானவயித்தியத்துக் காதியாச்சு,ஆச்சனென்றவயித்தியங்கள்செய்யும்போது-அறைகின்றேன் லேகியங்கள் தைலமீறாய், வாச்சென்றகட்டினங்க ளுருக்கினங்கள்-மகத்தான நீற்றினமாத் திரைசெந்தூரம், கூச்சென்றவிம்முறைகள் செய்யும்போது-குருவிலொருகாசெடைதான் போட்டுச்செய்யே. (௰௧)

காசெடைதான்குருப்போட்டுச் செய்தாயானால்-கண்காணாதோடுமடா நோய்கள்யாவும், கூசாதேவாதியென்றால் செய்வான்பாரு-கூறுகெட்டவயித்தியனே செய்யப்போறான், வாசியேமுப்பூவைச் செய்யாவிட்டால்-மைந்தனேபூநீரு என்றபோது, தேசியேபதினாறு தரந்தான்சுத்தி-செய்தபின்புவயித்தியத்தைச் செய்துபாரே. (௰௨)

செய்திடவேதீராத நோய்தானுண்டோ-செப்புகிறேன்முப்பூவின்வேதைமார்க்கம்,செய்திடவேமுப்பூவைக் கல்வத்திட்டுச்-சேர்த்திடுநீயடரு * வெள்ளைவர்க்கம்பாலும், செய்திடவேயிரண்டுமொன்றாய்ப்-பீங்கானிட்டுச் செயலாகச்சூடனொரு மாசுபோடு, ஐய்துடனேயொருசாமம் ரவியில்வைக்க-அப்பனேமுறிந்ததுவும் சலமுமாமே. (௰௩)

* வெள்ளைவர்க்கம் - வெள்ளெருக்கம்பால்.

சலமானகடுங்காரச் செயநீர்விட்டுச் - சார்ந்தரைத்துமுப்பூவின் வில்லைதட்டி, உலரவேரவிதனிலே காயவைத்து-ஓட் டிலிட்டுமேலோடு மூடல்செய்து, கலவானகுக்குடத்தி லிட்டுவாங்கிக்-கசக்காதேமூன்று முறை யரைத்தரைத்து, அரைவேமூன்றுதரம் போட்டுவாங்கு- அழியாதசவுர்க்காரச் சுன்னமாச்சே. (௰௪)

சுன்னமென்னசவர்க்கார வழலைதொட்டுச்-சொல்லுகிறேன்கடுங்காரக் குருவதாக, தன்னமென்ற * நாதவிந்து முதற்றரந்தான்-அல்லாட்டல்இரண்டாவ தல்லான்மூன்று, பன்னமேன்றநொயில்லாச் சிவந்தமேனி - பார்த்துநீநாதத்தை வாங்குவாங்கு, கன்னதொருநாதந்தா னிறங்கவேண்டின்- கற்பூரச்சிலாசத்துச் சுண்ணம்பண்ணே. (௧௫)

* நாதவிந்து-சிவந்தபூமியிலுள்ள சுத்தசலமும் பிரமகற்பக்கல்லும்.

பண்ணியேதாம்பூல மருந்தச்சொல்லு - பரிவானபனவெல்லந் தேங்காயூட்டு, நண்ணியேநாதமது இறங்குமெத்த - நலமானபீங்கானில் வாங்கிக்கொண்டு, உண்ணியேசலமாகக் கற்பூரம்போடு-உன்னுடையவிந்தொருகா செடைதான்சேரு, அண்ணியேமுறிந்ததுவுஞ் சலமாய்நிற்கும்-அதிலிடவுமருந்துவகை யறையக்கேளே. (௧௬)

அறைகிறேன்வீரமொன்று புனுகுபூரம்-அப்பனே * குருவண்டுவுரமுஞ்சூதம், கறையானஆறுபுள்ளி வண்டின்முட்டை † கருநாவிவகைவகைக்குப் பணந்தான்தூக்கு, உறையாகப்போட்டதிலே போட்டுமெத்தி-புத்தமனேகைப்பட்டால் வெந்துநீறும், கறையாதேகுச்சியிட்டு மத்தித்தப்பா-கதிரோன்முன்வைத்தெடுத்துக் கருதிக்கேளே. ()

* குருவண்டு - துவரஞ்செடியிலிருக்கிறவண்டு.

† கருநாவி - கறுப்புநாபி.

கருதியேசவர்க்காரத் தூட்டியாட்டிக்-கசகாதேவில்லைதட்டி ரவியில்வைத்து, அருதியேரவிதனிலே யிட்டுவாங்கி * ஐந்துகண்ணக்குகைக்குள்ளே வைத்தமூடு, சுருதியேயதின்மேலே சுண்ணச்சீலை-சுற்றிரவிமுகந்தனிலேயுலர்த்திப்பின்பு, பருதியேபத்தெருவிற்புடத்தைப்போடு-பக்குவமாயாறவிட் டெடுத்துவாங்கே. (௧௮)

* ஐந்துசுண்ணக்குகை-கடனுரைச்சுண்ணம், கிளிஞ்சிற்சுண்ணம், குக்குடச்சுண்ணம், வலம்புரிச்சுண்ணம், வெள்ளைக்கற்சுண்ணம், ஐந்துங்கூட்டிக்குகைசெய்தல்.

வாங்கியேமுன்னீரா லரைத்துக்கட்டி - வாகானசுண்ணாம்புக் குகையில்வைத்துப், பாங்கியேமுன்போலப் புடைத்துப்போடு-பதறுமலாறவிட் டெடுத்துவாங்கு, ஆங்கியேயெடுத்ததனைக் கல்வத்திட்டு-அப்பனேமுன்போற்று னரைத்துப்போடு, காங்கியேயிப்படியே யரைத்தரைத்துக்-கைம்முறையாயைந்துதரங் கணக்காய்ப்போடே. (௧௯)

போட்டெடுக்கவழலையென்ற சுண்ணமாச்சு-புகலுதற்குநாவுண்டோ பாவுண்டோசொல், காட்டுமுன்னேகடுங்கார மனந்தந்கேளு-க

னகமென்றபரிசுன்னம் வீரச்சுன்னம், ஆட்டுமேபூரத்தின் சுண்ணம் போடு-அழகானசாரமொடு சீனச்சுண்ணம், நீட்டுமென்றவகைவகை க்குக் காசெடைதான் - சேர்த்துசெப்புமுன்னீரா லரைத்துவில்லை தட்டே. (உ0)

வில்லைதட்டிரவிதனிலே யுலரவைத்து-வேதித்துக்கடுஞ்சுண்ணக் குகையில்விட்டு, தொல்லையெதுமில்லையப்பா சுண்ணச்சீலை-சுற்றியேகு க்குடநற் புடத்தைப்போடு, எல்லையற்றவீசனுக்கு மெட்டாவித்தை-யேகாந்தவெளியாகச் சொன்னேன்சொன்னேன், கல்லோடுமெண்மர ங்களுருவிப்பாயுங்-காட்டுமுன்னேயண்டரண்டம் வேகும்பாரே. ()

வேகுமடாநவலோக நவரத்னங்கள்-விஷமானபாஷாணம்* அறு பானுன்கும், வாகுபெறும்லவணவகை யிருபத்தைந்தும்-மைந்தனே † யுபரசங்க ளூற்றிரண்டுபத்தும், பாகுமேசொன்னதொரு சரக்கெ ல்லாந்தான்-படுமுன்னேகட்டயாங்கருக் குருவுமாகும், பாகுமேதுரிசி யது வெந்துநீரும் படுமுன்னேநவாச்சாரங் கட்டிப்போமே. (உஉ)

* அறுபானுன்கு - சுஅ - பாஷாணம்.

† உபரசங்கள் - ாஉ0.

போமென்றசவர்க்காரச் சுன்னந்தொட்டுப்-போட்டிடவே ருத மது விரைந்துபோகும், ஆமென்றவழலைதொட்டுச் சுனனங்கோடி-ய ழகானகட்டினமுருக் கினங்கள்கோடி, தேனென்றமெழுகோடு கள ங்குகோடி செயநீராந்திராவகமு மதனிற்கோடி, கோனென்றசெந்தூ ரக் குளிகைகோடி-கொள்ளையோகொள்ளையதில் வாதந்தானே. (உங)

வாதந்தான்முன்பின்னுய்ச் சொல்லிவிட்டு - மறைந்தாரேநாதா க்கள் ரிஷிகள்சித்தர், வேதந்தான்முடிவுபடா வுப்பாய்நின்ற-வேதாந் தவழலையைத்தான் வெளியாய்ச்சொன்னேன், நீதறவேவெளிதோன் றச் சொன்னேனென்று - சித்தரெல்லாமென்மேலே சண்டைசெய் தார், வாதாடியவருடனே வலமாய்ப்பேசி - வாங்கினன்காணுலகத் தோர் பிழைக்கவென்றே. (உச)

உலகத்தோர்பிழைக்கவென்று சொன்னேனப்பா-உத்தமர்க்கா ம்கர்மிகளுக் குதவாதிந்நூல், உலகத்தோர்பாஷாண்டி மெத்தவுண்டு-உத்தமனேவயிற்பிழைக்க வேடங்கொண்டு, உலகத்தில்வேதாந்த - கு ருநானென்று - ஓகோகோவாய்ப்பேய்ச்சால் மிரட்டுவார்கள், உலகத் தைக்குடிகெடுத்துப் பொருள்பறித்து - ஒன்றுமில்லையெனச்சொல்லி யலைவார்பாரே. (உரு)

அலைந்தலைந்துமண்ணில்செடி பூண்டுந்தேடி - யறுபத்துநாற்சரக்குஞ் சுட்டுசுட்டு, அலைந்தலைந்துதிரிந்தாலும் வாதங்காணார் - அம்பரத்தினெறிகாணுக் கசடரப்பா, அலைந்தலைந்திந்தவண்ணஞ்சுட்டுச்சாவார் அப்பனேகோடான கோடிமாந்தர், அலைந்தலைந்துவாதமொடு ஞானமுண்டு- அறிந்திட்ட பெரியோர்கள் சொல்வார்கேளே. (உசு)

சொல்வதுதான்சிவயோகி யானுற்கேளு-சுந்தரமாஞ்சற்குருவை வணங்கிப்போற்றி, அல்லுபகலற்றமர்ந்த சோதிதன்னை-யாழ்ந்துமனம்பூரணமாயறிவோடுன்னு, வல்லமைகள்பேசாதே யறிவாய்நில்லு-வாமியென்றவாலையைத்தா னிதமும்போற்று, கல்வியறிவுடையபெரியோர்தம்பாதம்-காத்திருந்தால்வாதமுறை காட்டுவாரே. (உஎ)

காட்டுவார்வாதமொடு ஞானமார்க்கங் - கலைகாணுவட்டாங்கம் யோகாங்கந்தான், காட்டினால்குருதொட்டே காட்டவேண்டுங் கைம்முறைபுஞ்செய்ம்முறையுங் காணவேண்டும், சாட்டியில்லாப்பம்பரம் போ லாசான்சொல்லச் சாத்திரத்தைப்பார்த்தாலும் வருமோவாதம், காட்டமிலாசான்சொல்லா லன்றிமாந்தர்-கோடிநூல்பார்த்தாலுங் கிட்டாதென்னே. (உஅ)

என்னவேகுருத்தேடி வாதம்பாரு-இல்லாட்டாலெந்நூலைக் குருவென்றெண்ணு, பன்னவேபதனமாய் வைத்துப்போற்று - பக்குவமாய்வந்தமுதல் வாசியாகுங், கன்னவேஞானங்கம் வேதாங்கம்பார்-கைம்முறையாஞ்சவர்க்கார வழலைச்சுன்னம், என்னவேகருக்குருவும் வெளியதாக ஈந்திட்டேன்கண்ணாடி முகம்போற்காணே. (உகூ)

கண்ணாடிமுகம்போலக் காணுமுள்ளங் - கைக்கனிபோற்றோன்றுமடா விந்நூல்வஞ்சம், புண்ணானபயல்களுக்குத் தோன்றாதப்பா-பொருளறியாமூடருக்குக் காட்டொண்ணாது, பண்ணானபண்ணிறியர்நூலீயாதே பழையதங்கமென்றிதனைப் பதனம்பண்ணு, விண்ணானபேர்களுக்கே யீந்தாயானால் - விண்ணிலிடிவிழுந்துதலை வெடிக்குந்தேறே. (ங௰)

தேறுதவாதமென்ன வயித்தியம்பாரு-செப்பரிதுவைத்தியநூற்பிரமவித்தை, கூறுனநூலறிந்து திறமாய்ச்செய்தால் - கூறவொண்ணா வாதத்துக் கொவ்வுமொவ்வும், ஆராயாதிதைவிட்டு வாதம்பார்ப்பா-ர தனாலேசெய்துநாம் பிழைப்போமென்றே, ஓராமல்பலகூட்டங் கூடி நீயும்உள்ளாசைகொண்டலைந்தால் வாதம்வீணே. (ஙக)

வாதந்தான்மனமடங்கி யறிவுக்குள்ளே - மற்றொருவரறியாமன் மவுனமாகப், போதந்தான்மனமென்ற வாய்வுதீட்சை-புகழானவாத மென்னுந் தீட்சையோடு, வேதந்தான்முடிவதுபோல் வாதஞ்செய்து-விள்ளாதேபூசைக்குங் கற்பத்திற்கும், கோதின்றிப்பரதேசிக் கன்னமிட்டுக்-கோயில்குளஞ்சாலைகட்டி யிருந்திடாயே. (௩௨)

இருந்தியாதுலகத்தில் வாழ்ந்தாயானால்-என்மேலேகுற்றமில்லை சாபமெய்தும், இருந்திட்டசாபத்தா லெய்தும்ரோகம்-இதனாலேகேடுகெட்டு அலைவாய்நீயும், பிரிந்திட்டதேவியிட பூசைசெய்நீ - பிதற்றுதேசாரரய வெறிகொள்ளாதே, மருந்திட்டமனமதுபோல் மதிகொள்ளாதே-வளமானசரக்குவகை சொல்லக்கேளே. (௩௩)

சொல்லுகிறேனில்லப்பனைபு * முத்தக்காசுஞ் சுயமானசிவன்வேம்பு தண்ணீர்மிட்டான், நல்லவொருவிலாமிச்சை வில்வவேரும்-நன்னாரி † குமரிவே ரமுக்கருவேர், ஒல்கியதோர் ‡ சலந்திரட்டி மூலிவேரும் - ஓரிதழ்த்தாமரைக்கிழங்கும் வெட்டிவேரும், அல்லவேதாமரையின் வளையம்நெல்லி-யால்விழுதுநீர்ப்பூலா வறுகம்வேரே. (௩௪)

* முத்தக்காசு-கோரைக்கிழங்கு, † குமரி-சோற்றுக்கற்றாழை, ‡ சலந்திரட்டி - கொத்தான்.

வேரானவல்லாரை * வீழிசங்கு மிளகரணை † கொடிவேலி ‡ காக்கைவேலி, சீரானசிற்றாமல்லி பேராமல்லி - சிறுபுன்னையிருவேலி சிறுகாஞ்சோரி, தாரானதூதுவளை கண்டங்காலி-தடிப்பானநிலவாகை சிற்றாமுட்டி, வேரானகருங்காலி நாவலத்தி-வெள்ளறுகுசிறுபிரப்பங் கிழங்காமின்னே. (௩௫)

*வீழி-விழுது†கொடிவேலி-சித்திரமூலம்‡காக்கைவேலி-உத்தாமணி

கிழங்கோடுகரிசாலை பொன்னாங்காணி - கெடியானவெள்ளைச்சாரணையின்வேரும், சழங்கோடுநெரிஞ்சிலந்தை சூரியோடுசார் * சிவன்வேர்முந்திரிவேர் முருங்கைவேரும், வழங்கவேசுடுதூரத்தி முட்காவேளை - மைந்தனேயகிலோடு † மலாக்காகெந்தம், முழங்கவேமூலிவகை நாற்பத்திரண்டு - முறையுடனேவகைவகைக்குப் பலந்தானந்தே. (௩௬)

* சிவன்வேர்-சிவனார்வேம்பு † மலாக்காகெந்தம் மலாக்காசந்தனம்.

ஐந்தாகவிவைமெல்லா மிடித்துநன்று-யடிகனத்தபாண்டத்திலிட்டுக்கேளு, ஐந்தானவீரெட்டு மரக்காணீர்தா - னளந்துவிட்டுஅடுப்பேற்றி யெரித்துக்காச்சு, நைந்திடவேபூசைசெய்தே யெடுத்துக்கொ

ண்டு-நலமாகவெட்டொன்றிற் மாதியாக்கி, மைந்தனேமறுபாண்டம் விட்டுக்காய்ச்சி-வளர்காற்றில் தூற்றிமிக வாற்றிவையே. (௩௭)

வைத்துமேயின்னமொரு செய்திகேளு-வள்வானஆவின்பால் படிதானுலு, பொய்த்துமேபோகாமல் சொல்லக்கேளு * புடமேழுநீர்ந்தசடை வன்னிகற்பம், பைத்துமேயிவையெல்லாம் பாண்டத்துள்ளே - பாலிட்டு அடுப்பேற்றி யெரித்துக்காய்ச்சி, வற்றியபின்னிரண்டு படி யாறுற்பார்த்து வடிகொண்டுமுன்வைத்துக் கொழுத்தூட்டே. ()

* ஏழுபுடம்போட்ட வன்னிகற்பப் - சாதிலிங்கம்.

ஊட்டடாவெள்ளாட்டுப் பால்தானென்று-உத்தமனேதேங்காய் பால் படிதான்ரண்டு, ஊட்டடாபாலோடு கொழுமொன்று-ஊட்டிவைத்துஇன்னம்வகை யுரைக்கக்கேளு, மூட்டடாசாதிக்காய் பத்திரிகிராம்பு - முடிவானஏலமொடு வங்கங்கோஷ்டம், வாட்டடாகுங்குமப்பூ கோரோசனைதான் வால்மிளகுகுராசாணி யோமமாமே. (௩௯)

ஓமமொடுவாலுழுவை கூகைநீரு-உற்ற * விருசீரகமுந் திப்பிலி மற்றும், வேமமார் † தாளிசம்வாய்-விளங்க ‡ மாஞ்சில் - வெட்பாலை || திரிகடுகு திப்பிலிமூலம், நாமமிகுமதிமதுரங் கொத்துமல்லி-நவாச்சாரமிலவங்கப் பத்திரியுங்கூட, காமகொடுதேக்கோலம் § தகரம்இந்துகசகசாமிஞ்சிட்டி சாரப்பருப்பே. (௪௰)

* இருசீரகம்-கருஞ்சீரகம்-நற்சீரகம். † தாளிசம்-தாளிப்பத்திரி. ‡ மாஞ்சில்-சடாமாஞ்சில் அதேபெருங்கோரை. || திரிகடுகு-சுக்குமிளகு-திப்பிலி. § தகரம்-தகரப்பச்சிலை.

பருப்பான * திரிபலையும் சமுத்திராப்பழமும்-பகரரியவலம்புரிக்காய் கர்க்கடகசிங்கி, விருப்பானகாமப்பூ மகரப்பூவும்-விதமானசிறுநாவற் பூவுங்கூட, கருப்பானசிற்றரத்தை பரங்கிப்பட்டை-கார்போகி பேரரத்தை கத்தூரிபட்டை, மருப்பானதாமரைக் கிழங்கும்அல்லி கொட்டி-மரமஞ்சணிலப்பனைவேர் மரவள்ளிதானே. (௪௧)

* திரிபலை-தான்றிக்காய், நெல்லிக்காய், கடுக்காய்.

வள்ளியாங்கிழங்குஞ்செங் கழுநீர்மூலம்-மாசற்றசெவ்வியதா மிந்திரபுஷ்டி, வள்ளியாம் * வேர்க்கொம்பு கடுகுரோணி-மகத்தானசிறுதேக்கு சித்திரமூலம், வள்ளியாம்வகைக்குப்பல மொன்றுசொன்னேம் - வளமாகஇளவறுப்பாய்ச் சூரணித்து, வள்ளியாம்வித்துவகை சொல்லக்கேளு-வாகானஅத்திவித்து முருங்கைவித்தே. (௪௨)

* வேர்க்கொம்பு - சுக்கு.

வித்தாமுமத்தைசடைக் கஞ்சாவித்து-விதமானமுன்னைவைத்து அத்திவித்து, கத்தானசூரிவித்து நெரிஞ்சில்வித்து - கருவேலின்வித்தோடுமாதளையின்வித்தும், வித்தாம்பூனைக்காலி கரணீர்முள்ளி-விளம்பாலின்வித்துநா யுருவின்வித்து, முத்தானகூவிளத்தின் வித்தின்மைந்தா முனையானகோதுமை யெள்ளுழுந்தே. (௪௩)

உழுந்தானகொம்மட்டி மாதளையின்வித்து உற்றதொருஆவாரை வித்துங்கூட, கொழுந்தானதேற்றான்வித் துஞாளிவித்துங் - கூந்தற்பனைவித்தோடு தாம்ரைக்காய்வித்தும், விழுந்தானஅரசம்பூ வரசவித்து - வெண்குன்றிவித்துசரக் கொன்றைவித்து, நழுந்தானதென்னைகருஞ் செம்பைவித்து-நலமானபுளியவரைத் தோலுங்கூட்டே. (௪௪)

கூட்டுவாய்வாதுமைநற் கொட்டையோடு-குலமானமுந்திரியின் பருப்போடியாவும், கூட்டுவாய்வகைக்கு அரைப் பலந்தான்சொன்னேன் - குமுறவேயிளவறுப்பாய்ச் சூரணித்து, கூட்டுவாய்முன்மருந்தோ டொக்கச்சேரு-கூர்மையுள்ளபுலத்தியனே சொல்லக்கேளு, சேர்த்திடுவாயின்னமொரு வகைதானப்பா குலவுநல்லதென்னம்பூ முருக்கம்பூவே. (௪௫)

பூவோடுமகிழம்பூ விலுப்பைப்பூவும்-புங்கம்பூமாதளம்பூ வில்வப்பூவும், மாவோடுகோங்கிலவு அத்திப்பிஞ்சு-மாசற்றசண்பகப்பூ * பாற்புரண்டி, சேவானபரித்திப்பூ வெள்ளிரிப்பூ-சிறுநெஞ்சில்காட்டாத்தி சிறுவிளாப்பூ, பாவானமுள்ளிலவு முருங்கைவாகை-பருங்கொன்றைகருவிளா கருவேல்வேம்பே. (௪௬)

* பாற்புரண்டி - சிறு அம்மான் பச்சரிசி.

வேம்பானமாமரத்தின் பிசினோடொக்க - விளம்பினன்காண்வகைவகைக்கு அரைப்பலமேவூட்டு-தேம்பாகநிழலுலர்த்திச் சூரணித்துச்-சிறப்பாகமுன்மருந்தோ டொவ்வச்சேரு, ஆம்பாகமாச்செய்தால் மோகதிக்காம் அதில்சர்க்கரைபலமிரண்டு அடைவாய்ச்சேரு, சோம்பாதேயிவையெல்லா மன்பாய்ச்சேரு-சொல்லுகிறேனின்னமொரு விவரந்தானே. (௪௭)

தானென்றசூரணத்துக் கிடைப்பாகங்கேள்-சமரசமாய்வங்காளச்சீனிவிட்டு, பானென்றகியாழமெல்லாம் பாண்டத்திட்டுப்-பாலோடு சீனிரண்டும் பாகுசேரு, மானென்றவிழியணங்கைப் புணருமைந்தா-மாந்தருக்குச்சொல்லாதே மதிமாறுதே, கானென்றசூரணத்தை போட்டுத்தீயில்-கைம்முறைபாய்க்கிண்டுவா யடிபற்றாதே, (௪௮)

பற்றுதேமுந்திரிபே ரீந்தன்பழுங்கள் - பக்குவமாய்வகைக்கிரண்டு பலந்தான்பேர்டு, பற்றுதேயாவினெய் படிதான்ரண்டு-பண்பாகவார்த்ததிலே கிண்டுகிண்டு,பற்றுதேழுறிபாம லடிபற்றுமல்-பாங்காகமெழுகுபதம் வருதற்பார்த்து, சுற்றுதேலேகியத்தை யிறக்கிக்கொண்டு-சூடாறிவந்தவுடன் தேனைவாரே. (சகூ)

தேனென்னகொம்புத்தேன் படிதான்வாரு-செப்பரிய அப்பிரேகச் செந்தூரங்கேள், வானென்றசெந்தூரம் பலந்தானென்று-வங்கச் செந்தூரமொருபலமேபோடு,கானென்றரசமொடரி தாரபற்பங்-கணக்கோடுவகைக்குஒரு பலமேபோடு, சேனென்றபுண்ணியனே யெல்லாம்நன்றாய்ச்-சேர்த்துநீலேகியத்தை நன்றாய்ச்செய்யே. (ருய)

செய்தபின்புசாபங்கணி வர்த்தியாகச்-சிறப்பானகணபதியுங் கந்தன்பூசை, செய்தபின்புஆயிபதம் பூசைபண்ணு-தீர்க்கமாய்வியாதிமாரணத்தையோது, செய்தபின்புவயித்தியற்கு மகிழ்ந்துநீதான்-திறமாகநாவிலொரு பாகமீயே. (ருக)

ஈய்ந்துமனங்குளிரவெகு மானஞ்செய்து - இதமானஅவிழ்தத்தை யுண்டுதேறு, ஆய்ந்தவிழ்தம்நாளொன்றுக் கிருவேளை-காலையந்திமுதல்கொட்டைப் பாக்களவுவிதம், சேர்ந்ததொருலேகியத்துக் கிச்சாபத்தியம்-திறமாகமண்டலந்தான் கொண்டுதேறு, ஆய்ந்தவிழ்தமண்டலந்தான் கொள்ளும்போது, ஆச்சரியமாய்த்தேகம் பசும்பொன்னாமே. (ருஉ)

பசும்பொன்னாந்தீருகிற நோயைக்கேளு-பகரரியமேகவகை யிருபதும்போம், பசும்பொன்னாஞ்சேத்துமங்க டொண்ணூற்றுறும்-பறக்குமடாகிரந்திபறை யாப்புருலே, பசும்பொன்னமந்தார மீளைகாசம்-பழுதானகாமாலை சோகைபாண்டு, அசங்காதசயங்குன்மம் கிரிச்சினங்களாறுமடாபதினெட்டுக் குட்டமென்னே. (ருங)

குட்டமென்றவாயிநோ யிருபத்தாறுங்-குடிகெடுத்தபித்தம்நாற்பதும்போகும், மட்டமாம்வாதமெண் பதும்போகும்-மஞ்சளூற்றவுதிரவெள்ளை பிரமியம்போம், பட்டமாஞ்சிரங்குசொறி கரப்பான்போகும்-படர்தேமல்தாமரைகள் பதினெண்சூலை, சட்டமாம்லிங்கப்புற்று யோனிப்புற்று * தழுதணையுமேகவகை யூறலென்னே. (ருச)

* தழுதணை - மேகத்தடிப்பு.

என்னவேதொண்டைப்புண் கண்டமாலை-யெழுவாளைவிற்புருதிபிளவைபுற்று,மன்னவேகன்னேசிகன்னப்புற்று-மகோதரமுமுண்மாந்தை நீராக்கவுசி, அன்னவேபெருவயிறு காய்ச்சல்கொண்ட- அக்

திசுரமத்திவெட்டை புஷ்ணவாயு, வின்னமொருஅரோசிகங்க ளன்ன தோஷம்-வெள்ளோக்காளங்களொடு விக்கற்போமே. (ருரு)

விக்கல்கைகாலெரிவு தேக்க்காந்தல்-மெலிவானபெரும்பாடோ டெலும்புரிக்கி, மெய்க்கவேகுழிவாளை யாறுப்புண்கள் - மேலான ரத்தவாய் வுடனேமிக்க, செய்க்கவேமூலக்குத்து மார்பிலாணி-திகழ் பெரியதொடைவாழை யிந்திரகண்டி, எய்க்கவேநரம்புவாய்ச் சிலந்தி யோடு-இந்தவகைநோய்களெண் பத்துநான்கே. (ருசு)

நான்கோடுபௌத்திரமு நேத்திரரோகம் - நந்தாதசிரசுநோய் தொண்ணூற்றுறும், ஊன்பாய்ந்தமூலவகை யண்டவாயு-உண்மையற் றகயரோகம் நாக்குரோகம், கூன்பாய்ந்தமூலவகையண்டவாயு-உண் மையற்றகயரோகம் நாக்குரோகம், கூன்பாய்ந்தவளைவுகுத்துப் பிசு மேல்மூச்சு - குடிகெடுக்கும்கிறுகிறுப்பு முதலாமெல்லாம், மீன்போ ன்றவழிமாதே தீருந்தீரும்-மிகுசோபநோயெழுந்து வீறுந்தானே. ()

தானென்றஸ்திரீகர்ப்ப நோய்களேழுந்-தணிந்துவிடுமலடியுமே பெறுவாள்பிள்ளை, பானென்றசிலவிஷங்க ளறுபானுன்கும்-பறக்கும் வண்டோடெலிக்கடியும் செய்யான்கூட, தானென்றபூரான்றன் கடிக ளெல்லாந் - தனியிடுப்புச்சூலைகழ லண்டவாதம், தேனென்றமேகரா சாங்கப்பேரும்-செப்பிடுனேயாவுந்தான் தீர்ந்துபோமே. (ருஅ)

போமென்றகல்லடைப்பு நீரடைப்பு - பொல்லாததுர்மாங்கிஷத் தடைப்புகூட, போமென்றநீர்த்துவார மெடுத்தரோகம்-புகலாதசலக் கழிச்சல் கடுப்பிரத்தம், வேமென்றசரீரத்தில் வெப்புப்பார்வை - வெ ண்குட்டங்கருங்குட்டம்விஷபாகங்கள், பாமென்றவிவ்வகைநோ யெ ல்லாந்தீயிற்-பட்டிடுபஞ்சதுபோலப் பாரிற்போமே. (ருகூ)

பாரிலேநோயெல்லாம் பறந்துபோகும் - பசுந்தங்கம்போலாகுந் தேகமப்பா, ஆரியுண்டகற்பங்க ளிதுக்கொவ்வாது-ஆச்சரியத் * தாது வெல்லாம் வீறிக்கட்டும், பாரியேநாதிகை ளெல்லாமாறும் - பள பளப்புவுடம்பெல்லாம் பரவிநிற்கும், காரியமாந்தேகமது கமழும்வா சம்-கண்களுந்தான்செவ்வலரிப் பூப்போலாமே. (சுய)

* தாதுகட்டும் - திரிநாடிகளுமுறுக்கேநிற்கும்.

பூப்போலாந்தேகமது சிவந்துமின்னும் - புனிதமிகுந்திரியச் சே துபொங்காநிகும், பூப்போலாஞ்சுங்கிலமு மிறுகிக்கட்டும்-பூவையுட ன்சம்போகஞ் செய்யப்போகின், * நாப்பாலாலளவறிந்து சொல்லப் போமோ-நாடோறும்பத்துமே ரிருக்கவேண்டும், தாப்பானசையோ!

கத்தாலேகெட்டுத்-தயங்காதேபெண்மாய்கை தள்ளுதள்ளே. (சுக)

* நாப்பால் - நாவினாலென்பது பொருள்.

மாய்கையடாபெண்மாய்கை தள்ளவேண்டும்-மயங்கினால்தேகசித்தி போகசித்தி, மாய்வதுமெய்மோகவலைக் குள்ளேசிக்கி-மாண்டார்கள்கோடான கோடிபோதான், மாய்கைவலைமுடிநால் யோகம்ஞானம்-வாய்க்காதுசித்தியெல்லா மழிந்துபோகும், மாய்கைதள்ளிநாதாக்கள்ரிஷிகள்சித்தர்-மாளாமலுகாந்தவனா வாழ்ந்திட்டாரே. (சுஉ)

வாழ்ந்திட்டவாதிமகன் வைத்தியனென்றால் - மைந்தனேகைமுறைகளறிந்துசெய்வான், ஆழ்ந்திட்டசுமூனைபற்றி நாடிபார்ப்பா-னந்தந்தவிதமறிந்து அவிழ்தஞ்செய்வான், ஆழ்ந்திட்டதாதுவிட கலக்கம்பார்த்து-ஆள்பலமுநோய்பலமு மாய்ந்தாய்ந்தோர்ந்து, சூழ்ந்திட்டநோய்களெல்லாந் தீரச்செய்வான்-தொல்லுலகில்வயித்தியர்கள் செய்யார்பாரே. (சுங)

பாரப்பாமேகவகை யிருபதுந்தான் - பறப்பதற்கு அப்பிரோகச்செந்தூரங்கேள், பாரப்பாநாலுவகைச் சாதியுண்டு-பரிவானகிருஷ்ணவப்பிரக மிகவுநன்று, பாரப்பாபத்துபலம் நிறுத்துக்கொண்டு-பசுவினிடகோமயத்தில் சாணுக்கத்தில், பாரப்பாஅப்பிரோக மதிலேயிட்டுப்பண்பாகஅவித்தெடுத்து இடித்திடாயே. (சுச)

இடித்துமேசுணையுள்ள கருநெல்தன்னை-யிதமாகக்கலந்துநன்றாய் ரொட்டில்கட்டி, வடித்துபத்துவிசைகாடி தன்னிற்றேய்த்து - வலுவாகப்பிசைந்தந்தச் செக்கைதள்ளி, நடித்துமேமூன்றுநாள் சென்றபின்பு-நலமாகத்தெளிவிறுத்துக் கொள்ளுமைந்தா, படித்துமேகணபதியைப் பூசைபண்ணு-பரிவாகநவநீதம் பார்த்துவாங்கே. (சுரு)

வாங்கியேகல்வத்தி விட்டுப்பின்னும் - வாகுடனேபழச்சாற்றால் நாலுசாமம், பாங்காகவாட்டியே வில்லைதட்டிப்-பக்குவமாயோட்டினிலிட் டோடுமூடி, ஆங்கியேகுழிவெட்டிக்கெச புடமேபோடு-ஆறவிட்டேயெடுத்துமுன்போ லரைத்துக்கட்டித், தியங்காதேயோட்டில்வைத் தோடுமூடிச்-சீலைசெய்துமுன்போலகெச புடத்தைப்போடே. ()

போட்டுமேயாறவிட்டே யெடுத்துப்பாரு - புகலுமுறைபத்துவிசை தப்பாதேசெய், ஆட்டுமேகல்மிஷங்க ளற்றுநிற்கும்-அதன்பின்புவாலரசு நாவலத்தி, பாட்டியேநாலுவகைப் பட்டைவாங்கிப் - பக்குவமாயிடித்துநன்றாய்க் கியாழஞ்செய்து, நாட்டியேகியாழத்தா லரைத்தரைத்து-நந்தாமல்முன்போலப் புடந்தான்பத்தே. (சுஎ)

பத்தானகுமரிச்சார் பலந்தான்பத்துப் - பகரரியமுருக்கிலைச்சார் புடந்தான்பத்து, அற்றானகொடிவேலிச் சாற்றால்பத்து - ஆதாளிசாற் றாலே புடந்தான்பத்து, கத்தானகவிழ்தும்பைச் சாற்றால்பத்து-கரந் தைசார்செருப்படிச்சார் வகைதான்பத்து, சத்தானவெருக்கிலையின் பழுப்புச்சாற்றால்-சலியாமல்பத்துவிசை யரைத்துப்போடே. (௬௮)

அரைத்துமேகுமட்டிமா தளையிற்பத்து - அடைவானபுளித்தமா தளையிற்பத்து, உரைத்துமேபோகாமல் முறைதப்பாமல் - ஒளியாமல் நூற்றிரண்டு பத்துமப்பா, அரைத்துமேபுடந்தீர்ந்தே யெடுத்துப்பா ரு-அம்மம்மாசெந்தூர மருணன்போலாம், தரைதனிலேவயித்தியர் களறியவேண்டுந்-தானதிலேமாவிடைச்செந் தூரம்போடே. (௬௯)

போட்டதின்மேலரிசியிடு வுழுந்துபோடு - புதையாதுசெந்தூரந் தான் மிதக்கும்பாரு, காட்டுமேமிதப்பதற்குச் செந்தூரந்தான்-கசடா னதளுக்கற்றுக் கனகமாச்சு, ஊட்டியேயின்னமொரு உபாயங்கேளு- உற்றநெய்பால்சர்க்கரைதே னுடன்பழமும், நாட்டியேபிசைந்தடுப்பி லேற்றிக்காய்ச்சி-நலியாமல்செந்தூரம் பதமாய்வாங்கே. (௭0)

வாங்கியேசர்க்கரைதேன் பழங்கள்நெய்யால் - வகையொன்றிற் குன்றியிடை கொள்ளும்காள்ளு, பாங்கியேமண்டலந்தான் கொள்ளு ம்போது-பாடியதோர்மேகவகை யிருபதும்போம், நீங்கியேகாசவகை யுஷ்ணரோகம்-நிலையாதுஅஸ்திசுர மஸ்திவெட்டை, தாங்கியேசயரோ கம் தொண்ணூற்றாறும்-சண்டாளக்கிரிச்சினங்க ளாறும்போச்சே. ()

போச்சப்பாபிரமேகம் வெள்ளைமஞ்சள்-புகழானபிரமியமு மேக வாய்வும், போச்சப்பாகிரர்ணிவகை பொல்லாரோகம் - புகலவொண் ணாச்சன்னிவகை யெல்லாமோடும், காச்சப்பாகாலெரிவு கையெரிவு மேனி - காந்தலுள இளைப்புடனே யிருமல்போகும், பாச்சாப்பாசர் வரோ யெல்லாந்தீரும்-பளபளக்குந்தேகமெல்லாம் பாலையாமே. ()

பாலையாந்தாதுவெல்லா மிறுகிக்கட்டும்-பங்கயம்போலங்கிறந் தங்கம்போலாம், காலையாஞ்சந்திரனி லமிர்தமூறும் - கண்கெட்டமா னிடரோ வறியப்போறார், ஆலமுண்டகண்டரிட மாகவைத்த-ஆயிபி டநாதமடா தெளிந்துபாரு, வேலைக்கும்வாதிக்கு மப்பிரோகந்தான்- மேதினியிலொன்றுமில்லை விபரங்கேளே. (௭௩)

* கதலிக்கந்தரசாயனம்.

கேளேநீசர்வரோ யெல்லாந்தீரக் - கிளத்துகிறேன்கதலிக்கந்தத் தின்மார்க்கம், கேளேநீகணபதியைப் போற்றிக்கொள்ளு-குருகன்பாத

ம்வணங்கிச்சற் குருவைப்போற்றி, கேளேநீகாண்கோஷ்டம் பலம் தானுலு - காரகண்டதிப்பிலியும் பலந்தான்ரண்டு, வீளேநீசுக்கிரண்டு சாதிக்காய்ரண்டு-மேலானகிராம்பு சீரகமுங்கூட்டே. (எச)

* கதலிக்கந்தம்-வாழைப்பூ.

கூட்டியேயிளவீறுப்பாய்ச் சூரணித்துக்-குணமாகக்கைகொண்டு கூறக்கேளு, கூட்டியேமிளகருணைச் சங்கம்வேரு-குலவுவகைக்கிரண்டுபல மிடித்துத்தூளாய், கூட்டியேமுன்மருந்தில் சேர்த்துவைத்துக்-கூறுபுளிதாளிசட்டி யொன்றில்விட்டு, காட்டியேகதலிப்பூ நூறுவெட்டிக்-காராவின்பால்கரைத்து வடிதான்கொண்டே. (எரு)

கொண்டேதான்படிரண்டு பாண்டத்தூற்று - கூரானவங்காரச்சீனி பலந்தான்பத்துங், கண்டேதான்கரைத்துநன்று யடுப்பிலேற்றிக்-காய்ச்சியேமெழுகுபத மானபின்பு, பண்டேதான்சூரணத்தைத் தூவியப்பா-பக்குமாய்க்கிண்டிவைக்க ரசாயஞ்சொன்னேம், இண்டேதானிறக்கிகணபதியுங்கந்த-னிதமான * வடுகனையும் பூசைபண்ணே. (எசூ)

* வடுகன் - வைரவன்.

பண்ணியேதேன்படிக்கால் விட்டுக்கிண்டிப் - பரணைதனிலடக்கிநெற் புடத்தில்வைத்து, உண்ணியேநாளொன்றிற் கந்திசந்தி-யுத்தமமேகொட்டைப்பாக் களவுநேரம், பெண்ணேகேள்பத்தியமா யுண்டுதேறு-பெரும்பாடுமெலும்புருக்கிப் பிறமேகங்கள், நண்ணேதான்மேகவகை பதினெண்சூலை-நாடாதுகிரந்திகுட்ட மனையாப்பெண்ணே.()

• என்னவேயத்திசுர மத்திவெட்டை - யியல்பானவுட்ணத்தோடெரிவுகாந்தல், கன்னவேகிரங்குசொறி கரப்பானூரல்-கனமானகிராணிவகைமூலச்சூடு, நன்னவேயிளைப்பிருமல் காசக்கூறு - நலங்கெடுக்குநீரிழிவு கிரிச்சினங்கள், என்னவேஸ்திரீகளுக்கு சூசிகாகெர்ப்பம்-ஏழுவகைரோகங்க டீர்ந்துபோச்சே. (எஅ)

போச்சென்றவாக்கியம்வாய்ப் பேச்சோமைந்தா-புகலுகிறேன் ரசபற்பம் வங்கபற்பம், காச்சென்றுசேர்த்துநீ கொண்டாயானல்-கனமானரோகமெல்லாங் கடலேபுக்கும், ஆச்சென்றவாதமொடு வயித்தியமென்ன-ஆராய்ந்துசாத்திரத்தைப் பார்க்கவேண்டும், காச்சென்றகுருமுறைகை முறையும்வேண்டும் - கனமானவாதியும்வயித் தியனுவானே. (எகூ)

ஆவதற்குமுப்பூவை யறியவேண்டு-மல்லாட்டால்வாதியல்ல நிருமூடன்ருன். ஆவதற்குவழலையென்ற கருவறிந்தால்-ஆடலாம்வாதமு

தல் வயித்தியந்தேர்ந்தே, ஆதவற்குவழலைவிட்டால் வாதம்போச்சு-அவிழ்தங்கள்செய்தாலுஞ் சித்தியில்லை, ஆவதற்குக்குருதேடி யறிந்த போது-ஆதியாமுப்பூவை முன்னேசெய்யே. (அ௰)

இரசபற்பம்.

செய்வதற்குரசபற்பஞ் செப்பக்கேளு-திரமானசூதமொரு பலந் தான்வாங்கு, பைவதற்குமேனிச்சார் வெற்றிலைச்சார் - பரிவானபழம ஞ்ச *ளாகாசத்தூள், உய்வதற்குக் † கொடுவேலிக் கியாழம்வைத்து-உற்ற ‡ திரிபலைக்கியாழ முவந்துசெய்து, நைவதற்குகண்டங்கத் திரியி ன்சாற்றில்-நன்காத்தேயடுப்பேற்றித் தகிக்கும்பே. (அக)

* ஆகாசத்தூள் ஒட்டடை † கொடிவேலி சித்திரமூலம்.

‡ திரிபலை கடுக்காய் தான்றிக்காய் நெல்லிக்காய்.

கரும்பினிடகறணையினாற் றேய்த்தரைத்து-கனமானவொருசாமந் தீபம்போலே, விரும்பியேமத்தித்து ஓடுமூடி-விதமாகவெழுசீலை மண் ணுஞ்செய்து, அரும்பியேகுக்குடமாம் புடத்தைப்போடு - ஆறவிட் டேயெடுத்துமறு படியுமைந்தா, கரும்பிலேகிண்டாம லோடுமூடிக்-கடுகெனவேமுன்போலப் புடத்தைப்போடே. (அஉ)

போட்டுமேயாறவிட் டெடுத்துப்பாரு-புகழாகநீகரும்பால் மே லூட்டாமல், ஆட்டுமேமுன்போல மூடிசெய்து - அப்பனேகுக்குடத் திற் போட்டெடுத்து, காட்டியேயிப்படியே திறமாய்ச்செய்து-நாலுப த்துபெருவெடுத்து நன்றுபாய்ந்து, நீட்டியேவேதாந்த வேதாந்தாநீ-நீ மகிழ்ந்துபுடம்போட்டு நினைவாய்ச்செய்யே. (அங)

செப்பவேதவளநிற மாகும்பாரு - சிவசிவாவென்னசொல்வேன் சூதபற்பம், செய்யவேயனுபான மறிந்துகொண்டால் - தீராதநோயே து செப்பக்கேளு, பையவேபனைவெல்லம் நெய்தான்பாலில்-பரிவான லேகியங்கள் கியாழபாகம், உய்யவேகொண்டுவரத் தீரும்நோய்கள்-உரைக்கிறேன்கிரந்திகுட்ட மரையாப்பின்னே. (அச)

* தவளம் வெள்ளை.

என்னவேகுன்மமெட்டுக் கிராணியாறும் - இணைந்துவருமூலவ கை யௌத்திரந்திரும், கன்னவேகைமுடக்குக் கால்முடக்குக்-கபா லகுஷ்டம்நீரிழிவு கயரோகங்கள், வின்னமாம்பிளவைபுற்றுக் கண்ட மாலை-விற்புருதிகுழிவாளை ஆறாப்புண்கள், அன்னவேமேகப்புண் ணமூபுண்அலை-அரிகரப்பன்சொரிகரப்பா னைத்தும்போமே. (அரு)

தாம்பிரபற்பம்

போமேதான் தாம்பிரத்தின் பற்பங்கேளு-புசலிய தாம்பிரத்தைத் தகடாய்த்தட்டி, ஆமேதான் சுத்திவகை திறமாய்ச்செய்து-துலக்க முடனெடுத்து ஒரு ஒட்டிலிட்டு, நாமேதானடுப்பேற்றி யெரியைமூட்டி-நற்கரும்புதனைத்துண்டாய் நறுக்கிக்கொண்டு, வேமேதானறுக்கியதோர் கரும்பினாலே-விதமாகத்தாம்பிரத்திற் றேய்த்திடாயே. ()

தேய்த்திடவே நாற்சாமங் கைம்மாறாமல் - தேய்க்கவே தாம்பிரந் தானெருங்கிநிற்கும், வாய்த்திடவே கல்வத்திலிட்டு நன்றாய்-மைந்தனே கெல்லுமியுங் கூடவிட்டு, ஆய்ந்துமே யரைத்திடவே நொறுங்குந்தானாய் - அதையெடுத்தோட்டினிலிட் டோடுமூடி, வாய்த்துமேசீலை செய்து கெசபுடத்தில்-மாபுடமாய்ப்போட்டிடச்செந் தூரமாமே. ()

ஆமடா பற்பத்தி லசடிருந்தா - லரையாமற் பின்னுமொரு ஓட்டிவிட்டு, நாமடா சீலைசெய்து புடத்திற்போடு-நல்லருணன் போலச்செந் தூரமாகும், பாமடா செந்தூரப் பற்பந்தன்னைப்-பணவெடையாயெடுத்து நெய்பால் தேனிற்கொள்ள, போமடா குன்மமெட்டுஞ் சூலையாறும்-பொல்லாத வாய்வுவென்றதெல்லாம்போச்சே. (அஅ)

போச்சென்றமேகவகை விருபத்தொன்றும்-போகாதகயரோகஞ் சயரோகங்கள், ஆச்சென்றவொரதமொடு வாயுசூலை-அஸ்திவெட்டை அஸ்திசுர முஷ்ணவாயு, காச்சென்றபௌத்திரநோய் சதையடைப்புக்-கடுகடுத்த கீழ்ரிவு பிரமேகங்கள், தீச்சுட்ட கருங்கற்போல் வெடிசூலைப்புண்-திருமின்னைப்பலவகைநோய் திறமாய்க்காணே. (அகூ)

காணப்பா பற்பங்கள் செந்தூரங்கள் - கருதியேகொள்ளுதற்குக் கருத்தாய்க்கேளு, பூணப்பா ஆவின்பால் நெய்யிற்கொள்ளப்-போதரவாய்க்கொண்டவற்கு புவியின்மீது, ஆணவங்கள் மெத்தவுண்டாம் நாதங்கட்டும்-ஆகாதநோயெல்லா மகன்றுபோகும், கோணமுறுப்பத்தியமோ விச்சாபத்தியங்-கொண்டுவா பெண்மாய்கை தள்ளிநில்லே. ()

நில்லென்று சொன்னாலும் நிற்கப்போமோ - நீதியுள்ளரதிரோகம் செய்யார் செய்யார், வெல்லுவதார் விந்துவைத்தான் மேலோரில்லை-விருதுபெற்றமௌனியல்லோ ஞானயோகி, அல்லவென்றேயவனியுள்ளோர் நாதத்தைத்தா - னடக்கவழியாமனைந்து செத்தார்கோடி, வல்லவனேயானுக்கா லனுபோகஞ்செய்-மாதத்துக்கொருமுறையாய் மதித்துச்செய்யே. (கூக)

வாதத்துக்கெட்டிவிரைத் தயிலம்.

செய்யவேவாதமொடு வாயுசூலை - தீரவேயெட்டியிட தயிலங்கேளு, பையவேசொல்லுகிறே னெட்டிக்கொட்டை - படிரண்டுஅளந்துமே யூறப்போடு, ஐயவேகல்லுரலி லிடித்துமைபோல் - அவ்வெடைக்கு * வெள்ளுள்ளி சேர்த்திடித்து, உய்யவேதிருகுகள்ளிச் சாற்றுலாட்டி-புத்தமனேவில்லைதட்டி நிழலுலர்த்தே. (கூஉ)

* வெள்ளுள்ளி - வெள்ளைப்பூண்டு.

உலர்த்தியேபூப்புடத்தில் தயிலம்வாங்கு - உற்றரசகற்பூரம் பலமோகால்தான், அலர்த்தியேகுருவிலொரு காசுபோடு - அப்பனேபரணிதனி லடைத்துமூடு, வனுத்துமேகாசெடைதான் தயிலங்கொண்டு-வாகானமேலகியங்கள் சூரணங்கள், பலக்கவேசேர்த்துநீ கொள்ளும்போது-பபன்வருங்காண்பலநோயு மொருங்கேபோச்சே. (கூ௩)

போச்சென்றவனுபான மறிந்துகொண்டால்-பொல்லாதசூலைபதி னெட்டும்போகும், வாச்சென்றவாதமெண் பதுவும்போகும்-வாகானகிரந்திபதி னெட்டுஞ்சாடும், காச்சென்றவலியைந்துங் குன்மமெட்டுங்-கரையடங்காவாய்வென்ற இருபத்தாறும், கூச்சென்றமெய்க்கடுப்போடுளைவுகுத்து-தலைமுட்டுஉருத்திரனுங் கீலுவாய்வே. (கூச)

* சிவன்வேப்புத் தயிலம்.

வாயுவொடுசருவநோ யெல்லாந்தீர - மைந்தனேசிவன்வேம்புத் தயிலங்கேளு, வாயுவொடுசிவன்வேம்பு சமூலங்கொண்டு-வளமாகநிழலுலர்த்திச் சூரணித்து, வாயுவென்றசூரணத்தோ டின்னமொன்று-வாலுழுவையரிசிசமன் கொண்டேநீதான், வாயுவென்றகருடனிட கிழங்குச்சாற்றால்-வளமாகவாட்டிமிக வில்லைகட்டே. (கூரு)

* சிவன்வேம்பு சிவனார்வேம்பு.

கட்டிபேபூப்புடத்திற் றைலம்வாங்கு - கருப்பூரம்காற்பலந்தான் பொடித்துப்போட்டு, கெட்டியாய்காசெடைதான் மண்டலங்கொள்-கெணிதமுடன்மேற்பூசத் தீரும்நோய்கள், குட்டமொடுகுறைநோயும் பெருவியாதி-கோளரியமேகவடி சூலைப்புண்கள், கட்டியுடன்வண்டுகடி யுளைச்சல்குத்து-கரப்பனொடுசில்விஷங்கள் காணுதென்னே. (கூசு)

சிவன்வேம்புச்சூரணம்.

காணுதசிவன்வேம்புச் சூரணங்கேள் - கருநிறபேசிவன்வேம்பு சமூலங்கொண்டு, கோணுதநிழலுலர்த்திப் பலந்தான்பத்துக்-குறிப்பாகச்சங்கழ்வேர் பலந்தான்ரண்டு, தோணுதவெள்ளைச்சா ரணையின்வே

ரும் தூதுவளைமிளகருணை யமுக்கருவேர், கோணாதுவகைவகைக்குப் பலந்தான்ரண்டு-கொடிவேலிநொச்சிகருஞ் சூரைவேம்பே. (கஎ)

வேம்புடனே திரிகடுகு திரிபலாதி - விதமானகார்போகி கரியசீரம்,சேம்பானகடனுரையும் வசம்பிந்துப்பு-செப்பரியகருங்காலிப் பட்டையோடு, கோம்பானமூலமொடு பரங்கிப்பட்டை-கோப்பிரண்டை கருவாகை * யூறற்பட்டை, சோம்பாகவகைக்கிரண்டு பலமாய்ச் சொன்னோம்-சொற்பெரியசிவனார்தன் வேம்புகேளே. (கஅ)

* ஊறற்பட்டை - கிளியூறற்பட்டை.

கேளேநீயிவையெல்லா மொன்றாய்ச்சேர்த்துக் - கிரமமுடனிழலுலர்த்திச் சூரணித்து, தேளேநற்பாண்டத்தி லிட்டுமைந்தா-திருகுகள்ளிச்சாறும்வெள் ளாட்டுநீரும், வேளேநீபேய்க்குமட்டிச் சாற்றினோடும்-விதமான * தேசிச்சார் வகைவகைக்கு, கேளேதான்வகைக்குஒரு படிதான்வார்த்து-குமுறவேவிரவிநன்றாய் மூடிப்போடே. ()

* தேசிச்சாறு - எலுமிச்சம்பழச்சாறு.

மூடியேநாண்மூன்று புதைத்துவைத்து - மூசிபாமலெடுத்துரவியுலர்த்திநன்றாய், நாடியேசட்டிதனி லிட்டுமூடி-நணுகியந்திசந்திவெருகடிதூளப்பா, மூடியேதூளதனை யெடுத்துநீயும் - முன்சொன்னசிவன் வேம்புத் தயிலந்தன்னை, பாடியேகாசெடைதான் சேர்த்துக்கொள்ளப்-பதினெட்டுச்சூலைகுட்டங் குறைநோய்போமே. (௰)

குறைநோயுமரையாப்பு மட்டகுன்மம் - குன்றாதவெடிச்சூலை சொறிசிரங்கு, கரையாதவாயுஞ்சந் திடுப்புச்சூலை - கைம்முடக்குக் கால்முடக்குக் கீலுச்சூலை, துறையானகிரந்திகுட்டம் சூழ்கரப்பான் தொடைவாளைவிற்புருதி கண்டமாலை, பறையாதலிங்கபுற்று யோனிப்புற்று-பழுவாளையெழுவாளை கன்னப்புற்றே. (௰க)

புற்றானசிலந்திவகை காத்தவாயன்-புரையானகுழிவாளை யாறாப் புண்கள், எத்தானவண்டுகடி புடையன்பூரான்-எலிகடியும்பலபலவான் சில்விஷங்கள், நத்தானகன்னோசி யக்கப்புற்று - நாவரட்சிபலபுற்றுப் பல்லரணைதானும், மித்தானவாய்வென்ற விருபத்தாறும்-மேகவகையிரண்டுபத்தும் விழலாய்ப்போமே. (௰உ)

போமென்றவிந்தவகை நோய்கள்யாவும் - பொடியாகுங்காயசித்தி மேவும்பாரு, வேமென்றஉலகத்தோர் பிழைக்கவேண்டி-வெளியாகச்சாத்திரத்தை விரித்துவிட்டேன், காமென்றவைத்தியரோ நூலைப்பார்த்துக்-கைம்முறையுஞ்செய்ம்முறையுங் கணக்கோடாய்ந்து, நாமெ

ன்ற அகச்செருக்கை விரும்பிடாதே-நவிந்தோர்க்குமருந்தீய்ந்து நிலையைப்பற்றே. (௱௩)

கிராணிவகையாறுக்கும் வச்சிராதிகபாடம்.

பற்றவேகிராணிவகை யாறுந்தீரப் - பாடுகிறேன்வச்சிராதி கபாடங்கேளு, முற்றுனசாதிக்காய் கிராம்புபத்திரி - முனையானதிரிகடுகு திரிபலாதி, கொற்றமுள்ளமாபனையு மதூரமின்னங்-குரோசானிவால் மிளகுந் * திப்பிலியத்தி, குற்றமிலாக்கோஷ்டமொடு நாகப்பூவுங்-கூறமெவாண்ணுப் புகழ் † விடைய ‡ மாஞ்சில்வித்தே. (௱௪)

* திப்பிலியத்தி-யானைத்திப்பிலி † விடையாம்-அதிவிடையம்.

‡ மாஞ்சில்-சடாமாஞ்சில்.

வித்தானஓமமிரு சீரகமுமல்லி-விதமானதாளிகமு * முத்தக்காசும், சத்தானமிடிலவங்கமோடுகூட - சார்வானகாட்டாத்திப் பூவோடின்னும், அத்தானகசகசா † கர்க்கடகசிங்கி - அனல்படமேற்றீர்ந்த ‡ சடைவன்னிக்கற்பம், கொத்தானமருந்தினுட பட்டையோடும் () கூவிளத்தின்பழத்தோடும் விளாவுங்கூட்டே. (௱௫)

* முத்தக்காசு-கோரைக்கிழங்கு † கர்க்கடகசிங்கி-கடுக்காய்ப்பிஞ்சு.

‡ சடைவள்ளிக்கர்ப்பம்-சடைக்கஞ்சா.

() கூவிளத்தின்பழம்-வில்வப்பழம்.

கூட்டியேயபினோடு புளியினோடுங்-குணமானமாங்கொட்டை பருப்புமைந்தா, நாட்டியேவகைவகைக்குப் பலமேகால்தான் - நந்தாமற்சொன்னேன்காண் பிந்தாதேநீ, நீட்டியே யெல்லாமோர்கல்வத்திட்டு-நேர்ப்பான ஆலரசுநாவலத்தி, வாட்டியேநீர்ப்பூலா வேருங்கொள்ளு-வளமான் வொதியம்பட்டையுமாமன்றே. (௱௬)

பட்டையாவாரைவேர் விடத்தோல்நெல்லி-பாங்கானவிலந்தைவேர் பலவுங்கொண்டு, இட்டமுடன்வகைக்கிரண்டுபலந்தான்சொன்னே-மிடித்துமேயெட்டொன்றாய்க் கியாழஞ்செய்து, எட்டாதமுன்சொன்ன மருந்தையெல்லாம்-இளவறுப்பாய்ச்செய்துமுன்னே கியாழமூட்டு, மூட்டியேபெருங்காயங் கழஞ்சொன்றிற்கு - மூதண்டகல்வத்திலாட்டுவாயே. (௱௭)

ஆட்டியொன்றாய்க்காயவைத் தடைவாய்மைந்தா - அன்புடனே தொன்னைதனி லதனையூற்றித், தோட்டியேகாய்கின்ற சட்டிக்குள்ளே-தொன்னையுடன்மருந்தைநடு வைத்துமூடி, மூட்டியேதீபதனை மெதுவாய்வேக-முடிமன்னுநீசெய்து முடிந்தபின்பு, மாட்டியேபுரட்டிநன்றாய் வேவைத்து-மருப்புடமெடுத்ததனைக் கல்வத்தாட்டே. (௱௮)

கல்வத்திலிட்டுமுன் கரையத்தூட்டி-களரவேயாட்டிமுன் தொன்னைக்குள்ளே, கல்வத்தில்முன்போல மருந்தையிட்டுக்-காய்கின்றசட்டிக்குள்வைத்துமூடு, நல்வைந்துமுன்போலே வேகவைத்து-நலமாகவெடுத்ததனைக் கல்வத்திட்டு, எல்வைத்துயிப்படியே யரைத்தரைத்து-ஏழுதரம்பாவனையாய்ச் செய்திடாயே. (௯௯)

செய்திடவேசுண்டைக்காய்ப் பிரமாணந்தான் - திரட்டியேகுளிகைதன்னை நிழலுலர்த்தி, பைதுமேயனுபான- மறிந்துகொண்டாற்-பறக்குமேயாறுவித கிராணியெல்லாம், பொய்துமேநற்பொன்னாங்காணிச்சாறும்-புகழாவாரைவேலின் பட்டைச்சாறும், எய்துமேகோவையிட கிழங்கின் சாறு * இதமேதியிர்மோருந் தேனுமாமே. (௱௰)

* மேதி-எருமை.

தேனோடுபச்சரிசி கழுநீர்சேர்த்துச்-செப்பியதோரிவ்வகையா மனுபானத்தில், ஆனென்றகிராணிவகை யினமறிந்து - அந்தந்தநோயினனு பானங்கண்டு, காமென்றவொருவுண்டைபோட்டுமைந்தா-கைகண்டுபிடித்தாற்போற் கிராணியாகும், தேனென்றவயிற்றுளைச்சற் சீழிரத்தந்-தியங்கியே யபானத்திற் கடுப்பும்போமே. (௱௰௧)

கபாடலேகியம்.

போமென்றகிராணிக்கு வச்சிரக்குளிகை புகழ்ந்திட்டேனின்னமொரு லேகியங்கள், ஆமென்றசாதிக்காய் கிராம்புபத்திரி - ஆனைத்திப்பிலியோமம் * விடையங்கோஷ்டம், வாமென்றகசகசா சிரகந்தான்-வால்மிளகுந்தாளிச-முங் குராசானிமற்றும், வாமென்றதிரிகடுகு திரிபலாதி () மதுரமொடுவெந்தியமுஞ் சிங்கியாமே. (௱௰௨)

* விடையம்-அதிவிடையம் () மதுரம்-அதிமதுரம்.

சிங்கியொடுமல்லிபுந்தான் லவங்கமபினி-திறமானகஞ்சாவு மாஞ்சிவேரும், தங்கியதோரகிலோடு காட்டாத்திப்பூ-தயவானதாமரையின் கிழங்கினோடு, இங்கிதமாம்விழலரிசி யிவற்றோடின்னும்-இதமானநீர்முள்ளி வித்துகூட, மங்கியதோர்கார்கோளி முத்தக்காசு-வழுத்தவொண்ணாத்தென்னைமரப் பாளைப்பூவே. (௱௰௩)

பூவானமாதளையின் வித்துங்கூடப்-பூலாவேர்க்கருவேலம் வித்தும்மைந்தா, காவானபெருமரத்தின் வேருஞ்செய்ய-கதியானபுளியின்விரைத் தோலுமாகும், பாவானமாங்கொட்டைப் பருப்புமாகும்-பகரரியகாட்டுக்கள் ளுருணைவேரும், மாலாவகைக்கிரண்டு பலமேசொன்னோம்-வளர்நிழலி லுலர்த்திச்சூ ரணந்தான்செய்யே. (௱௰௪)

செய்திடவேயின்னமொரு செய்திகேளு-தீர்க்கமுடனுலரசு நாவலத்தி, ஐதிடவேமுள்ளிலவோ டொதியம்பட்டை-யப்பனேமுடக்கற்றான் வெள்ளைப்பூலா, எய்திடவேயிவைசமனு யிடித்துநன்றா - வெட்டொன்றாய்க்கியாழம்வைத் திடித்துக்கொண்டு, பெய்திடவேயாவின்பால் படிதான்ரண்டு-பெட்டுடனேபனைவெல்லம் பலந்தான்பத்தே. ()

பத்தானபாலோடு கியாழம்ரண்டு - பக்குவமாய்ப்பேற்றிப் பாகுசேரில், அத்தானசூரணத்தைக் கொட்டிக்கொண்டு- ஆவினெய்படிதானொன் றதிலேவாரு, முத்தாகக்கிண்டிபதை மெழுகுபோலே-முதிராமலிறக்கிவைத்துத் தேனைவாரு, பற்றுமற்பார்த்துமே கிண்டும்போது-பக்குவமாய்க்கெந்தக செந்தூரம்போடே. (௱௰௬)

போடவேலோகசெந் தூரம்போடு - புகழாகவகைவகைக்கோர்பலமேபோடு, ஆடவேயிப்படி லேகியந்தானப்பா-அன்பாகநாளொன்றுக் கந்திசந்தி, வாடவேவேண்டாமன் டலமேகொள்ளு-மகத்தானகிராணிவகை யாறும்போகும், சாடிவருஞ்சீழ்க்கிராணி சலக்கிராணி-சந்திரன்றன்கிராணியொடு மூலவாய்வே. (௱௰௭)

மூலமாம்வாயுவென்ற கிராணியோடும் - முனையானசூசிகா கிராணியோடும், ஆலமாம்பாண்டுவகை கிராணிபோகும் - அசங்காதகிராணிகுன்மம் பித்தமேகும், சாலமாம்வாதபித்தம் வாயுநீங்கும் - தடுத்துவந்தசண்டாள மேகமேங்கும், சீலமாம்வயிற்கடுப்பு மூலகிராணி-தீங்கானநோயெல்லாந் தேங்கும்பாரே. (௱௰௮)

சயகாசத்துக்கு தூதுவளைகற்பம்.

பாரப்பாசயகாச மெல்லாந்தீரப்-பாடுகிறேன்தூதுவளைக் கிருதந்தன்னை, நேரப்பா தூதுவளைச் சமூலஞ்சொன்னோம்-நீழலிலேயுலர்த்தித்தூள் பலந்தானாலு, சேரப்பாவழுதலையுங் கண்டங்காலி-சிறிதாகுஞ்சோரியுட னாடாதோடை, ஓரப்பர்வகைப்பலந்தா னென்றுசொன்னோம்-உலர்த்தித்தூள்முன்மருந்தோ டொக்கச்சேரே. (௱௰௯)

சேர்ந்துமேதிரிகடுகு திரிபலாதி-சிற்றரத்தைபேரறத்தை சிங்கிகோஷ்டம், கார்த்துமேசீரகமுங் கொத்துமல்லி - கசகசாசாதிக்காய்பத்திரிகிராம்பு, சார்த்துமேகூகைநீ ரக்கிராகாரம்-சண்பகப்பூவசம்புமிருசீ ரகமுமதுரம், கோர்த்துமேநெற்பொரியும் பருத்திவிந்துங்-கெடிதானநெல்லிமுத்தம் விளாவினோடே. (௱௨௰)

விளாவோடுநிலப்பனைவேர் முக்காவேளை-மேலான * வகைவகெந்திவேர்த்தீதா லுந்தான், அளவானசிறுதேக்கு செவியமாஞ்சில்-அழகா

னதாளிசப்பத் திரியுங்கூட்டு, மிளகோமமூலமொடு தேவதார-வீலகி லும்லவங்கப்பட் டையோடேலம், விளவானமூக்குரட்டை கிழ்க்கால் நெல்லி-மேனிகரிசாலையுடன்பிராய் மூட்டியிந்தே. (௱உக)

* அசுவகெந்தி - அமுக்குரா,

இந்தோடுகருங்காலி யிழந்துகொற்றை-யிருவேலிதேள்கொடுக் கிமிரு தனமூஞ்சங்கு, இந்தோடுபொடுதலையும் * குல்லைவேரும்-இதி ன்சார்வெட்பாலையும் வேலிப்பருத்தி, இத்தோடு †சதாவேரிமணத்தக் காளி - யிவையெல்லாம்வஸ்திரகாய மதாய்ச்செய்து, இத்தோடுமுன் சொன்ன சூரணத்தில் இதமாகபணமகிழ்வுற் ஞெருக்கச்சேரே. ()

* குல்லை-துளசி. † சதாவேரி - தண்ணீர்மிட்டான்.

சேர்த்துமேயின்னமொரு செய்திகேளு-செப்பரியவாவின்பால் வெள்ளாட்டின்பால், சேர்த்துமேகுமட்டிமா தனையின்சாறுந் - தேசி யென்றபழச்சார்நெல்லிக்காய்சாறும், சேர்த்துமே * கூழ்ப்பாண்டங் † குமரிச்சாறுந்-திகழரிய ‡ ஆம்பற்சா || ருள்ளிச்சாறும், பார்த்துமே வகைக்குப்படி யனைதான்சொன்னோம்-பாலானவகைவகைக்குப் படி தான்ரண்டே. (௱உஙு)

* கூழ்ப்பாண்டம் - சாம்பற்பூசணி அதேகலியாணபூசணி.
† குமரி-கற்றாழை, ‡ ஆம்பல்-அல்லி, || உள்ளி-வெண்காயம்.

ரண்டானவிவையெல்லாந் தாளிசேரு-நயமானபனைவெல்லம் ப லந்தான்பத்து, கண்டானவெங்காளச் சீனிபலம்பத்து - கருவானபழை வெல்லம் பலந்தானைந்து, அண்டாதேகனைத்தொன்றாய்த் தாளிசேர்த் து - அடுப்பேற்றியோர்விறகா லெரியைமூட்டு, பண்டாதேசாரெல் லாம் வற்றக்காய்ச்சிப் - பதங்குழம்பாய்வருமளவிற் பரண்டங்கொ ட்டே. (௱உச)

கொட்டியேயடுப்பேற்றிக் கிண்டுவாய்நீ-குறுக்கியேமெழுகுபத ந் நியாமற்பார், அட்டியேபதமான ஆவினெய்யில்-அன்பாகவொருபடி தான் வார்த்துக்கிண்டு, திட்டமாய்மெழுகுபதம் வருதல்கண்டு - திற மானகொம்புத்தேன் றெளிவாகத்தான், ஒட்டியேநீமகிழ்ந்து உறுதி யாக உதவுமனைபடிவாங்கி யோங்கிவாரே. (௱உரு)

வார்த்திடவேயின்னமொரு வரிசைகேளு - வயித்தியரோயிம்மு றைகளறியார்காணார், ஆர்த்திடவேநாசபற்பம் வங்கபற்பம்-அரிதார பற்பமொடு பவளபற்பம், வார்த்திடவேவகைக்குக்காற் பலமீடேபோடு

* வழலையென்றகுருவிலொரு காசுபோடு, ஆர்த்திடவேயப்பிரோகச் செந்தூரந்தா னதட்டியேயொருபலந்தான் கூடப்போடே. (௱௨௬)

* வழலை-மூப்பூ.

கூடவேபோட்டுநீ கணேசன்கந்தன் - குலவிடுநெல்வடுகனையும் பூசைபண்ணு, வாடவேவேண்டாங்காண் தேவிபூசை - வளமாகச்செய் துநீ சாபந்தீர்த்து, சாடவேசட்டியிலே பதனம்பண்ணு-சரியாகநெற் புடத்தி விட்டுவாங்கு, பாடினேன்கொட்டைப்பாக் களவுநேரம்-பத்தியமாய்மண்டலந்தா னுண்டுதேறே. (௱௨௭)

உண்டிடவேவியாதிமா ரணத்தைபோத-ஓயாதுநோயாளி கருமந்தீரும், கொண்டிடவேசயகாசந் தொண்ணூற்றாறும்-குத்திருமல்நெட்டிருமல் குருகுருப்புச், சண்டியாமிளைப்பிரும லீளைகாசந் - தனிப்பித்தமந்தார காசம் * கோஷம்,தொண்டையிலேகுவளைக்கட்டு சிலேஷ்மகாசந்-தொலையாதவாதசயம் விழலாய்ப்போமே. (௱௨௮)

* கோஷம்-இரைச்சல்.

விழலாகுமஸ்திசுர மஸ்திவெட்டை-வெண்மஞ்சட்காமாலை சோகைபாண்டு, விழலாகும்வாய்வுடனே சூலைகுன்மம்-மேகவகைகிரந்திய ரை யாப்புச்சூலை, விழலாகுமெய்க்குடைச்சல் கைக்குடைச்சல் - மேலெரிவுகாந்தலுளைப் பிடிப்புச்சூலை, விழலாகுங்கீர்சூலை யண்டவாதம்-வீறானநோய்களெல்லாம் நீறாய்ப்போமே, (௱௨௯)

பொமென்றபாண்டுகா மாலைசோகை - போகவேகரிசாலை லேகியங்கேள், தேமென்றகரிசாலை சமூலங்கொண்டு - திறமாகநிழலுலர்த்திச் சூரணித்து, நாமென்றபலம்பத்து நிறுத்துவைத்து-நலமானகடுக்காயும் நெல்லிதான்றி, வேமென்றதிரிகடுகு மிரண்டுசேரம் - விதமான தாளிசையு மோமமாமே. (௱௩௰)

ஓமமோடதிமதுரங் கொத்துமல்லி-யுற்றதொருஏலமோடு லவங்கப்பட்டை, ஓமமொடுசடாமாஞ்சி சிங்கிகோஷ்டம்-ஒளிவானநாகப்பூவகிலுங்கூட, ஓமமொடுமரமஞ்சள் முட்காவேளை-உண்மைபெற்றசாதிக்காப் பத்திரிகிராம்பு, ஓமம்வாய்விளங்கமொடு தகரவித்து - உரையானவெட்பாலை * சிறுவிளாவேரே. (௱௩௧)

* சிறுவிளா - குட்டிவிடா.

வேரானவெட்டிவிலா மிச்சமுன்னை - வில்வவேர்விளாம்பழத்தினோடுங்கூட, பேரானதழுதாழை பொன்னாங்கண்ணி - பெரியவொரு

நாய்வேளை கீழ்க்காய்நெல்லி, வீறானசிற்றாமுட்டி பேராமுட்டி * வீழி சங்குமுசுமுசுக்கை யமுக்கராநொச்சி, பாரானநெருஞ்சிசெருப் படை யின்வேரும்-பலமானகாட்டினிலக் குறிஞ்சாவாமே. (௱௩உ)

* வீழி - விழுதி.

வாமென்றநிலவாகை விஷ்ணுகாந்தி-வன்முருங்கைபெருமருந் துங் காட்டுமல்லி, வேமென்றசிறியவா லுழுவையோடு-வெட்பாலைய ரிசிமுத்தங் பேரீந்தோடு, தாமென்றமுந்திரிவேர் சித்திரமூலஞ்-சாற் றுசிறுதேக்குமொட் டரும்பாவாரை, தோமென்றஆல்விழுது தென் னம்பாளை-துணையானசெங்கழுநீர் மூலந்தானே. (௱௩௩)

தானைநெய்தலொடு மூலவேருந்-தனிவெட்டிவேருந்தா மரை யின்வேரும், கானைதும்பிமாம் பழத்திநோடு * கங்கைமீட்டான்பே ய்ப்புடலும் பூமிச்சருக்கரை, கோனைவெள்ளருகு காட்டாளிக்கிழங் கு-கூர்முருங்கைப்பூவுமா தளையின்பழமும், தேனைசிறுபச்சைப் பய றிலுப்பை-திகழும்பூதாமரையின் கிழங்காமென்னே. (௱௩௪)

* கங்கைமீட்டான் - தண்ணீர்மீட்டான்.

என்னவேவகைக்குவகைப் பலந்தானென்று - இளவறுப்பாய்ச் சரக்கையெல்லாஞ் சூரணித்து, கன்னவேர்விபுலர்த்தி மருந்தோடொ க்க-கலந்துவைத்தேயின்னம்வகை கருதிக்கேளு, பன்னவேநீர்முள் ளி கரிசாலையின்னம்-பருவேப்பம்பட்டையொடு நெல்லிப்பட்டை, வ ன்னமொருநரவலத்தி யொதியம்பட்டை-வாகானஆல்விழுது கூடக் கூட்டே. (௱௩௫)

கூட்டேநீகிளியூறற் பட்டைமைந்தா - குல்லையொடுகீழ்க்காயின் நெல்லிப்பட்டை, நாட்டேநீகார்கூந்தற் பட்டையோடு - நன்னாரிதன் னுடனே யாடாதோடை, காட்டேநீசீந்திலொடு பேய்ப்பிரப்பன்-கன மானகூழ்ப்பாண்டம் வெள்ளரியின்வித்தும், மாட்டேவாழைப்பூவும் சிறுகீரைதானும்-மாவரசும்நாணலொடு * கையானுமே. (௱௩௬)

* கையான் - கரிசலாங்கண்ணி.

ஆமேதான் * கருப்பம்வே ராவின்வேரு-மடைவானநெல்லிவே ர் சுமரிவேரும், தாமேதான்தொரட்டிவேர் † காக்கைவேருந் - தனி யானமுடக்கற்றான் வேருந்தானும், பேமேதானாழலாத்தி கோவைத் தண்டும்-பிரமியொடுதழுதாழை ‡ வெள்ளீண்டாகும், நாமேதான்பே ய்க்குமட்டி சூரிகெந்தம்-நலமானவகையொன்றிற் பலந்தானீந்தே.

* கருப்பம்வேர்-கரும்பின்வேர், † காக்கைவேர்-காக்கணன்வேர்

‡ வெள்ளீண்டு - வெள்ளையீயச்செடி.

ஐந்தாகச்சரக்குவகை யெல்லாம்வாங்கி - யருங்கல்வத்திடித்து ஒரு பாண்டத்திட்டு, சிந்தாதேயிருதூணி நீரும்விட்டுத்-திறமாகவெட்டினிலொன் றாக்கிக்கொண்டு, குன்றாதேகியாழத்தை வடித்துவாங்கிக்-குமட்டிமாதளையின்பழச் சாற்றுநாழி, நன்றான * நிம்பச்சார் படிதானென்று-நல்லாவின்வெள்ளாட்டுப் பாலுங்கேளே. (௱௩௮)

* நிம்பச்சாற் - எலுமிச்சம்பழச்சாறு.

கேளேநீவல்லாரை புளியாைச்சாற் ; கிரமமுடன்வகையொன்றிற் படிதானென்று, பாளேநீயளந்துமுன் கியாழத்தூட்டிப்-பரிந்தடுப்பிலேற்றிச்சர்க் கரைபலந்தான், நாளேநீயைந்தாகப் போட்டிஞ்சிச்சாற்-நாழிவிட்டுஅுகைப்பையிறுற் கிண்டக்காய்ச்சு, சூளேநீகுழம்பானுற் சூரணத்தைத்-தூவிக்கிண்டாவிநெய் படிதான்வாரோ. (௱௩௯)

வாரோநீமயனம்போற் கிண்டிவாங்கு-வளமாகமெழுகுபதம் வருதற்பார்த்து, காரோநீகருகாம விறக்கிவைத்துக் - கலங்காமலொருபடி கொம்புத்தேன்வாரு, பாரோநீயத்தனையும் போதாவிட்டால் - பக்குவமாயாவினெய் பின்னும்வாரு, சேரோநீநெய்வார்த்துக் கிண்டும்போது-திரிலோகசெந்தூரம் பலந்தான்ரண்டே. (௱௪௰)

ரண்டோடுகாந்தச்செந் தூரம்போடு-நல்லகர்ப்பூரசிலா சத்துப் பற்பம், முண்டாதேயொருபலந்தான் போடுமுன்னே-மொழிந்தமுட்பூக்குருவிலொரு கழஞ்சுபோடு, தண்டாதேயிவையெல்லாம் போட்டுக்கிண்டிச்-சாடிதனிலிட்டுநெற் புடந்தான்வைத்து, கொண்டிடவே நாளொன்றுக் கந்திசந்தி - கொட்டைப்பாக்களவாகக் கொள்ளுகொள்ளே. (௱௪௧)

கொள்ளேநீநாடோறுந் தப்பாமற்றான் - கூறுகின்றபத்தியமோ இச்சாபத்தியம், தள்ளேதான்புளிபுகையும் பெண்ணுமாகா-நன்மீனும்பச்சைமாங் கிஷமுமாகா, உள்ளேதானெவ்வொன்று மாகாதப்பா-உத்தமனேபத்தியமாய்க் காக்கச்சொல்லு, விள்ளேதானுகாத நோயறிந்து-வீறுகமருந்தீந்து வயித்தியம்செய்யே. (௱௪௨)

செய்யேதான்பொல்லாத நோய்களெல்லாந்-திறமாகமண்டலந்தான் கொண்டாயானுல், நையாதகாமாலை சோகைபாண்டு-நந்தாதசயரோகம் போகும்போகும், மையாததெண்பாண்ட மாறிப்போகும்-வளமானகவுசியுமுள் மாந்தைபோகும், பொய்யாதபீலிபெரு வயிறும்போகும்-பொருமகோதர * மாம்பற் கௌசிபோமே. (௱௪௩)

* ஆம்பல் - நீராம்பால்.

கௌசிபோம்பாண்டுவகைக் கிராணிதீரும்-கனமானஉப்பிசமக்கினியாமந்தம், கௌசிபோம்பித்தரோ கங்காமாலை-கனவெட்டைகாலெரிவு கையெரிவும், கௌசிபோமஸ்திசுர மஸ்திவெட்டை-கதிகெடுத்தவரோசிங்க ளன்னதோஷம், கௌசிபோம்நீரிழிவு மீளைபோகுங்-காணுதவாதமெல்லாங் கலங்கிப்போச்சே. (௱சச)

* வெட்டை - பித்தவெட்டை.

† வாயிலப்பு - வாயூறல் - மகோதரம் - நீர்க்கோவை.

கொண்டைச்சலக்கோவை யிவைகளுக்குமருந்து.

போச்சென்றவாயூறல் வாயிலப்பு-போகவேயின்னமொரு சூட்சங்கேளு, காச்சென்றவல்லாரையொரு தலைவெள்ளுள்ளி-கசக்கியே வாயிலிட்டு மெல்லத்தீரும், வேச்சென்றவிம்முறைதா னுருஞ்சொல்லார்-வெகுசுறுக்காய்நெய்யாகும் விரும்பிப்பாரு, காச்சென்றமகோதரம்நீர்க் கோவைபோகக்-காட்டுகிறேனுட்டுக்குள் பாட்டுங்காணே.

காணவேகும்மட்டிக் காயைவாங்கிக்-கத்திகொண்டுபதினாறு கீற்றாய்க்கீறி, காணவேயைந்துவகை லவணமூட்டிக் - கலசத்திலிட்டடைத்து ஆவிகொட்டாந், தோணவேபுதைத்ததன்பின் னதிலேதாக்குத்-தூயவேபட்சமொடு சென்றுவாங்கு, ஆணவேநாளொன்றுக் கொருகீற்றப்பா-அருந்தியேபத்தியமா யிருந்திடாயே. (௱சசு)

இருந்திடவேமகோதரமும் விஷநீர்கோவை - இனிதானசலக்கோவை யாம்பற்கௌசி, அருந்திடவேயிவையெல்லாந் தீருஞ்சொன்னேன்-னப்பனேயின்னமொரு விபரஞ்சொல்வேன், பொருந்தியேயெள்ளுப்பூத் தொக்கினோடு-புகழ்பச்சைக்கருவாடு மாதளையுங்கூட, அருந்தவேயிலையதனை யிடித்துப்பின்பு-அவித்துமூன்றுநாளுண்ணக் கோவைபோமே. (௱சஎ)

* கோவை - சலக்கோவை,

போமென்ற காய்ச்சலொடுகட்டிகெண்டை-பொருமலோடுஉப்பிசங்கள் போகச்சொல்வேன், தேமென்றசாதிக்காய் கிராம்போடேலம்-திரிகடுகுபெருங்காயம் வெள்ளைப்பூண்டு, வேமென்றகார்போகி கரியசீரம்-விருதானதேசாவரங் கல்லுப்போடு, நாமென்றசவுட்டுப்பு விந்துப்போடு-நவாச்சாரம்வகைசமனாய் நாய்வேளையே. (௱சஅ)

நாய்வேளைச்சாறதனா லரைத்துநன்றாய் - நாள்மூன்றுநிழலுலர்த்திப் பின்னுங்கேளு, நீவேளைச்சாற்றினால் முப்பாலாட்டி-நிழலுலர்த்தி நாள்மூன்று சென்றபின்பு, ஆயவேயெடுத்துமுன்போற் கல்வத்திட்டு

அச்சாற்றுலாட்டிமுன்போ னிழலுலர்த்தி, தோயவேசூரணமாய் செய்துகொண்டு-துலங்கவேயனுபான மஹிந்திணங்கே. (௱௪௯)

இணங்கவேகரப்பானு பேழமெங்கே-என்மக்காள்பெண்மலடு உண்டோசொல்லு, வணங்கியேயிம்முறைதா னறியார்மாந்தர் - மலடென்றும்பிள்ளையில்லை யென்றுமாய்வார், குணங்களைத்தான்சொன்னேன்வையித் தியரோகேளீர் - கூறுகெட்டலையாதீர் குறிப்பாய்பாரீர், குணங்களாமேகவகை யெல்லாந்தீரக்-கூறுகிறேனின்னமொரு எண்ணெய்கேளே. (௱௫௰)

மேகத்துக்குக்கிருதம்.

எண்ணெயாமிளகருணை வெள்ளைச்சாரணைவேர்-இதமானமுந்திரிவேர் முருங்கைவேம்பு, தண்ணவேகுமரிமர வள்ளிசீந்தில்-சலந்திரட்டிகரிசாலை பொன்னுங்காணி, விண்ணவேயமுக்கிரு சங்கங்குப்பி-வெள்ளீண்டுநீர்ப்பூலா வீழியோடு, திண்ணமாம்நிலைப்பனைவே ரத்திப்பட்டை-சிறுவிளாவெள்ளறுகு வல்லாரையாமே. (௱௫௧)

ஆடையாமுடக்கற்று னகத்தியோடு - அப்பனேவகைக்கிரண்டு பலந்தான்சொன்னோம், ஆரையாமகத்தியது சமூலங்கொண்டு - அழகாகநிறுத்திடுவாய் பலந்தான்பத்து, சேரவேநன்றாக இடித்துமைந்தா செல்லுமொருதாழியிலே சலந்தான்கேளு, வேரையான்சீரகமும் பலந்தானெட்டு வெந்தயமோர்பலமெட்டு மதிலேபோடே. (௱௫௨)

போட்டுபதினறுபடி சலந்தான்வாரு-போக்கோடேயடுப்பேற்றி எட்டொன்றாக்கி, ஆட்டுநல்லஅடுப்பிறக்கி யாறவிட்டு-அழகானகியாழத்தை யிறுத்துவாங்கி, தீட்டியேகியாழந்தா னளவுகண்டு * சிற்றேரண்டெண்ணெய்படி ரண்டுவாரு, காட்டியீருள்ளிச்சாற் படியிரண்டு காராவின்பாலிரண்டு கல்நாரொட்டே. (௱௫௩)

* சிற்றேரண்டம் - சிற்றாமணக்கெண்ணெய்.

எட்டானகல்நாரை வஸ்திரகாயம்-இதமாகச்செய்ததிலே போடுபோடு, மட்டானராயபுரிச் சர்க்கரைதானெட்டு - வாகாகப்போட்டதிலே கிண்டிக்காய்ச்சி, இட்டமாய்ப்பாலோடு கியாழம்வைத்து - எண்ணெயாய்மெழுகுபத மாகக்கிண்டி, தட்டியேகற்கத்தோ டிறக்கியாறு-சாமமிட்டுமூடியேதா னியப்புடம்வையே. (௱௫௪)

வைத்துமேபட்சமொன்று கழித்துவாங்கு - மைந்தனேநாளுக்கோர்கரண்டிவீதம், உயர்த்துமேதினந்தோறும் கொண்டாயானல்-ஓ

டுகிறநோய்களைநீ யோர்ந்துகேளு, மெய்த்தொருமேகங்க ளிரண்டுபத்தும்-மேலானகிரந்தியரை யாப்புக்கட்டி, கைத்ததொருஅஸ்திசுர மஸ்திவெட்டை-கரப்பானுடுசிறங்குசொறி மேகம்போமே. (ாருரு)

மேகமொடுநால்வகையாம் பிரமியங்கள்-வெண்குஷ்டம்தாமரைகள் மேகவூறல், மேகமுறும்பித்தவாயு உஷ்ணவாயு-மெய்யெரிவுகைபெரிவு காலெரிக்ரந்தல், மேகமாம்வாயுவொடு அண்ணவாதம்-மெல்லியர்கள்கெப்பநோயேமூந்தீரும், மேகமாமலடிகட்குப் பிள்ளையுண்டாம் விருதானவயித்தியரே விரைந்துபாரே. (ாருசு)

விரைந்துபார்வாதமாஞ் சரீரமானல் - விரும்பித்தேன்தனிலேவெருகடித்தூள்வை, கரைந்திடவேவுஷ்ணமாஞ் சரீரமானல்-மாசற்றஆவினெய் தனிலேயூட்டு, கரைந்திடவேகாய்ச்சலொடு கெண்டைகட்டி - கலங்கியேயுன்னைவிட் டோடும்பாரு, குறைந்திடவேநோய்களெல்லாங் கூறிட்டோடுங்-குவலயத்தில்கைகண்ட வித்தைபாரே. ()

குமட்டிக்காய்த்தயிலம்.

பாரப்பாசருவநோய் வெருவியோடப்-பாடுகிறேன்குமட்டிக்காய்த் தயிலந்தன்னைச், சேரப்பாகுமட்டிச்சாறு படியிரண்டு-சிற்றேரண்டத்தெண்ணெய் படியிரண்டு, ஆரப்பாஆடாதோடை படியோரண்டு-அவுரியுடன்திருகுகள்ளி வீழிகஞ்சா, வேரப்பாகழற்சிமுடக் கற்றான்கூட-வேம்பின்பட்டைச்சாறும் வகையைக்கேளே. (ாருஅ)

வகைவகைக்குப்படியொன்று அளந்துவாரு-வாகான *வெண்மறிநீர்ப் படிதான்பாதி, தகையானவெருக்கினிட பழுப்புச்சாறு †சதுரமாக்கள்ளிப்பால் வண்ணமாகும், அகமானவிவையெல்லாம் பாண்டத்திட்டு-அடுப்பேற்றிக்குருகிவரும் பருவந்தன்னில், மிகவானதிரிகடுகு திரிபலாதி-வெண்காரமிந்துப்பு ‡ விளங்கமாமே. (ாருசு)

* வெண்மறி-வெள்ளாடு † சதுரமாங்கள்ளி-சதுரக்கள்ளி,
‡ விளங்கம் - வாய்விளங்கம்.

விளங்கமாம்வெண்கடுகு கடுகுரோணி-விருதானகருஞ்சீர கந்தான்கூட, விளங்கவேநவாச்சாரம் சத்திச்சாரம்-மேலானஎவர்ச்சாரம் வளையலுப்பு, களங்கமாமத்திதிப் பிலியுமூலங்-கல்லானமரமஞ்சள் கனகல்லுப்பு, அளக்கமாம்வகைவகைக்கு பலமோவொன்று - அப்பனேகல்வத்தி லரைத்துப்போடே. (ாசுய)

அரைத்துமேகரைத்தந்தக் கியாழங்கற்க-மப்பனேயடுப்பேற்றி எரித்துக்காய்ச்சு, வரைத்துமேமெழுகுபத மதனைப்பார்த்து-வடித்

துனீவாங்கியே தான்பதனம், பண்ணு அரைத்துமேதானியபுடம் வைத்துமூடு - அடைவாபோர்மண்டலந்தான் சென்றபின்பு, உரைத்தோமேநாளொன்றுக் கொருகரண்டி-யுத்தமனேயுண்டுவர வுறுதியாமே.

உறுதியாம்நாள்மூன்று கொள்ளுபத்தியம் - உப்பாகாதாறுநாள் பத்தியங்காரு, இருகியாமேழுநாள் தலைநீர்வார்த்து-எட்டாநாள்மற்றதெல்லாங் கூட்டுகூட்டு, பிறிதியாந்தீருகிற நோயைக்கேளு - பேசவொண்ணுவாயுவென்ற விருபத்தாறும், அறுதியாம்நீராமை மகோதரங்கள்-அஷ்டகுன்மம்பேராம்பல ளைத்தும்போமே. (௱௬௨)

அனைத்தும்போமுறுதியாம் நீர்க்கோவைபோகு - மடல்கட்டி கௌசிமுதல் கெண்டைபோகும், மனத்துள்ளேயுறுகோழை பொருமல்போகும்-வயிறுற்றவுப்புசநோய் வாடிப்போமே, கனத்தபெண்கட்குற்றகர்ப்ப நோய்களேழும் - கதித்தோட அவள்குளித்த மூன்றுநாளில், தனத்தமுடன்நாளொன்றுக் கொருகரண்டி-தயவாகக்கொடுத்துவரச் சார்புங்கேளே. (௱௬௩)

சார்பென்னநாலாநா ளாறப்போட்டுத் - தாரமாமைந்தாநாள் தலைநீர்வார்த்து, சார்பென்னசாத்தியொடு ஓமத்தாலே - தானமதுசெய்வித்துக் கிரகசாரம், சார்பென்னவிவையெல்லாந் தீரச்செய்து - தனியேழாநாளில்நா யானைச்சேர, சார்பென்ன இன்னமொரு சூட்சம்பாரு-தலைமைபெறும்வயித்தியரே சாற்றக்கேளே. (௱௬௪)

சாற்றக்கேள்சருவநோ யெல்லாந்தீரும்-சார்த்தரசகர்ப்பூரம் விராகனுனு, மாற்றக்கேள்நந்திச்சாற் முசுமுசுக்கை-வண்சாற்றாலிருசாமம் கருக்குப்போடு, போற்றக்கேள்சுறுக்கிட்ட கர்ப்பூரத்தைத் - புகழ்ந்தெண்ணெயிற்போட்டுச் சுகமதாக, தேற்றக்கேள்தானியப்புடம் வைத்தெடுத்துத்-தேங்காதெசாபத்தை நிவர்த்திசெய்யே. (௱௬௫)

செய்யேநீசண்முகற்குங் கணேசருக்குந்-தேவிக்கும்பரமான வடுகனுக்கும், செய்யேநீபூசைமுத லானசைவத்து-சேர்ந்தநவசித்தரதுசாபந்தீர்த்து, செய்யேநீமனங்களித்து வயித்தியந்தான்-தேசத்தோர் புகழ்வார்கள் வெகுமானங்கள், செய்துமேமகிழ்வார்கள் மைந்தாவுனைத், தீராதநோயுண்டோ செப்பக்கேளே. (௱௬௬)

பஞ்சலவணபற்பம்.

செப்பக்கேளைந்துவகை லவணபற்பம்-தெளிவானநூலறிந்தோர் சொல்லார்சொல்லார், மெய்ப்பாகஐந்துவகை லவணமெல்லாம்-விதமானவுக்கவகைக்குப் பலந்தானென்று, தப்பாமல்கல்வத்திலொன்

ருப்ப்போட்டுச்-சார்வாகமைபோலப் பொடித்துப்பின்பு, கப்பாகம்பி ரண்டைசரர் * முருங்கைச்சாருங் - கனமானமேனிச்சாற் றொச்சிச் சாறே. (௱௬௭)

* முருங்கைச்சாற் - முருங்கைபட்டைச்சாற்.

சாறானகுமரிச்சார் வகைவகைக்குச்-சாமமொன்றாய்விட்டரைத் து வில்லைதட்டி, வீறுகரவியுலர்த்தி யோட்டிலிட்டு - மேலோடுமூடி யே சீலைசெய்து, கூறுகப்பத்தெருவிற் புடத்தைப்போடு-குணங்கெட் டுஅலையாதே லவணபற்பம், யாறுமலெடுத்துப்பீங் கானிலிட்டு - வள மானபெருங்காயம் நாலத்தொன்றே. (௱௬௮)

ஒன்றாகச்சேர்த்ததிலே தேனைவாரு-உறவுடனேமத்தித்து வைத் துக்கொண்டு, நான்றாய்நாளொன்றுக்குக் கழஞ்சுவீதம்-நன்மையுட னிருநேரங் கொள்ளுகொள்ளு, குன்றுதவாய்வெங்கே வாதமெங்கே குத்தலொடுகுடைச்சல்வலி கடுப்புச்சூலை, அன்றானவாயுசர்த்தி மேக மெல்லா-மண்டவாய்வெல்லாந்தா னகன்றுபோமே. (௱௬௯)

போமென்றவாதமெண் பதுவுஞ்சூலை-புகழானசூலையது விருபத் தாறும், ஆமென்றஅட்டகுன்மங் கிராணியாறு-மந்திரமாம்வாயுவொ டு ருத்திரவாய்வு, கோமென்றகுண்டலமாம் வாயுவெட்டும்-குடல்புர ட்டோடுஷணமுப் பிசமுமந்தம், ஆமென்றவிவ்வகையாம் வியாதியுள் ள-அசையாதமகோதரமு மகன்றுபோமே. (௱௭௰)

அரையாப்புகிரந்திசூலை முதலியவற்றிற்கு மூலிகை.

அசையாதஅரையாப்புக் கிரந்திக்கெல்லா-மறைகிறேன்மூலிகை யி லப்பாகேளு, திசையாதசங்கங்குப்பி * நாயிலைச்சாற் திருகானகள் ளிச்சாற் ஆவின்பாலும், வசையாதநல்லெண்ணெய் சமனாய்க்கொண் டு - மயங்காமல்மூன்றுநா ளாறுவேளை, நசையாதநேரமொன்று படி கால்வீதம்-நல்கிநீகொண்டுவரப் பத்தியங்கேளே. (௱௭௧)

* நாயிலை - இலைகள்ளி.

கேளப்பாஆவின்பால் வெள்ளாட்டின்பால் - கெடியானவென்னீ ரா மற்றொன்றாகா, நாளப்பாஏழாநாளுப் புவறுத்துண்ணு - நலமாகந் தலைமுழுகி யெல்லாங்கூட்டு வேளப்பாஅறையாப்பு * கள்ளிப்பூக்கிர ந்தி-விதமானஅரிக்கிரந்தி சொரிக்கிரந்தி, சூளப்பாபுண்புரைகள் கை கால்பிடிப்புச்-சூலைமுதல்ரோகமெல்லாந் தீர்ந்துபோமே. (௱௭௨)

* கள்ளிப்பூக்கிரந்தி-கள்ளிப்பூப்போலும் நிறமுள்ளகிரந்தி.

தீர்ந்துபோம்கர்ப்பூரஞ் சேர்த்துக்கொள்ளு - தீருமப்பாவாதமு தல் வாயுசூலை, நிர்ந்துபோம்பிரமேகம் வெள்ளைவிழ்தல்-தீராதகிரந்தி

